# தீக்கதிர்

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி [மார்க்சிஸ்ட்] நாளிதழ்


உள்ளே

தேர்தல் நிதிகள்

அன்பளிப்பு


கதிர் 9] 4 பக்கங்கள் 12 காசுகள் மதுரை 11—2—71 வியாழக்கிழமை [மலர் 5


# கேரள அரசு ஸ்தம்பித்தது

பால்காவடி! பன்னீர் காவடி!

## மாநில அரசு ஊழியர்களின் மகத்தான வேலைநிறுத்தம்!

திருவனந்தபுரம், பிப். 10—

**விலைவாசி விஷம்போல் ஏறிவரும் நிலையில் கிராக்கிப்படி உயர்வு கோரி கேரள மாநில அரசு ஊழியர்கள் இன்று முதல் காலவரையற்ற வேலை நிறுத்தம் தொடங்கியுள்ளனர்.**

அரசாங்கத்தின் உருட்டல் மிரட்டல்களுக்குப் பணியாமல் உருக்குப் போன்ற உறுதியுடன் கேரளம் முழுவதிலும் ஊழியர்கள் வேலை நிறுத்தத்தில் பங்கு கொண்டுள்ளனர். வேலைநிறுத்தம் பரிபூரண வெற்றியடைந்ததாக அரசாங்க வட்டாரத் தகவல்களே தெரிவித்தன.

தண்ணீர் சப்ளை, மருத்துவ மனைவேலைகள், சுகாதாரப்பணி போன்ற அத்தியாவசிய பணிகளுக்கு மட்டும் 3 நாட்களுக்கு இந்த வேலை நிறுத்தத்தில் விதிவிலக்களித்தனர்.

ரூ 10 கிராக்கிப்படி உயர்வு மட்டுமே தர முடியும் என்று முதலமைச்சர் அச்சுதமேனன் திட்டவட்டமாக அறிவிக்கதால் ஊழியர்கள் வேலை நிறுத்தப் போராட்டத்தில் இறங்குவதைத் தவிர வேறு வழியில்லாதுபோயிற்று. விலைவாசியைக் கட்டுப்படுத்த நடவடிக்கை எடுக்க மறுக்கும் மத்திய மாநில அரசுகள் ஊழியர்களுக்கு விலைவாசி உயர்வை சரிக்கட்டும் முறையில், கிராக்கிப்படி தரமறுப்பதால் போராடுவதைத் தவிர வேறுவழியில்லை.

மத்திய அரசு ஊழியர்களுக்குதரப்படும் கிராக்கிப்படி விகிதத்தை மாநில அரசு ஊழியர்களுக்கும் வழங்குவதற்கு கேரளமாநிலதய ராகயில்லை. மாநில அரசு ஊழியர்களுக்கு நியாயமான ஊழியம் வழங்குவதற்குப் போதிய நிதிவசதியைக் கூட மாநில அரசுகளுக்கு இந்திரா அரசு அளிக்க மறுத்து வருகிறது. பதவியையே குறிக்கோளாக வைத்திருக்கும் அச்சுதமேனன் அரசாங்கம் மத்திய அரசின் இந்த நிலையை எதிர்ப்பதற்குத் தயாராயில்லை.

அடக்குமுறையினாலும் பழிவாங்குதலினாலும் மாநில அரசு ஊழியர்களின் போராட்டத்தை ஒடுக்கி விடலாம் என அச்சுதமேனன் அரசாங் ... வரு ... இறுதி வெற்றி கிடைக்கும் வரை ஊழியர்கள் உறுதி கொண்டுள்ளனர்.

இன்று கேரள மாநில அரசு ஊழியர்களின் வேலை நிறுத்த ... நிர்வாக அமைப்பே ஸ்தம்பித்துவிட்டது.

## 3 படி போட முடியவில்லையாம் மன்னிக்கவேண்டுமாம்

காஞ்சீபுரம், பிப். 10—

காஞ்சீபுரத்தை அடுத்த ஐயயபாளையத்தில் கடந்த 7—2—71-ல் ஒரு தி. மு. க. தேர்தல் பொதுக் கூட்டம் நடந்தது.

உத்திரமேரூர் தொகுதி தி. மு. க. வேட்பாளர் திரு ராஜகோபால் பேசினர். அவர் பேசுகையில், "சென்ற தேர்தலின் போது, நாடாளுமன்றத்துக் போட்டியிட்ட தி மு க. வேட்பாளர் சிட்டிபாபு இங்குவந்து, ரூபய்க்கு 3 படி அரிசி போடுவோம் என்று பேசினர். அவர் சொன்னது தவறுதான். பொது மக்களாகிய நீங்கள் மன்னிக்கவேண்டும். எங்களால் போடமுடியவில்லை" என்று கூறினர்.

இவர்கள் இருவரும் எம். எல். ஏ. யாகவும் எம். பி. ஆகவும் இருந்தவர்கள்.

## பிரசன்ன நெசவாளர் காலனியில் தேர்தல் கமிட்டி அமைக்கப்பட்டது

அவனியாபுரம் பிப் 10:—

திருப்பரங்குன்றம் சட்டமன்றத் தொகுதியில் உள்ள பிரசன்ன நெசவாளர் காலனியில் கே. கே. ரெங்காச்சாரி தலைமையில் மார்க்சிஸ்ட் ஆதரவாளர்கள் கூட்டம் நடைபெற்றது.

தோழர்கள் வாசுதேவன், கே. சுப்பையா, கே.பி ஜானகியம்மாள் ஆகியோர் பேசினர். திருவாளர்கள் கே. கே. ரெங்காச்சாரி, சோமி ராமமூர்த்தி ஆர். ஆர். காந்தாராம், கே. எஸ். ராமச்சார், கே பி. கிருஷ்ணன், ராமியா வெங்கட்ராம் மற்றும் பலரைக் கொண்ட தேர்தல் கமிட்டி அமைக்கப்பட்டது.

## போராட்டத்தின் காரணமாக மின் தொழிலாளர் விடுதலை

மதுரை பிப். 11:-

உண்ணுவிரதத்தில் ஈடுபட்ட மதுரை நகரசபை மின் தொழிலாளர்கள் தங்களது போராட்டத்தை வாபஸ் பெற்றுக் கொண்டனர்.

இவர்களது போராட்டத்தின் காரணமாக, சென்னையில் கோட்டை முன்பு கைது செய்யப்பட்ட ஐவரும் விடுதலை செய்யப்பட்டதை ஒட்டி — தங்களது உண்ணுவிரதப் போராட்டத்தை நிறுத்திக் கொண்டனர்!

உண்ணுவிரதத்தைக் கைவிட்ட பின்னர் - இன்று மதுரை நகரசபை முன்பு கூட்டம் நடந்தது. கூட்டத்தில் தமிழ்நாடு மின்சாரத் தொழிலாளர்கள் மத்திய அமைப்பின் சார்பில் அதன் துணைச் செயலாளர் தோழர் ஜி சுந்தரம் — நகரசபை மின் தொழிலாளர்களின் போராட்டத்திற்கு ஆதரவு தெரிவித்துப் பேசினர்.

நேற்று உண்ணுவிரதப் போராட்டத்தினை உடைப்பதற்காக மின் வாரியத்தில் இருந்து தொழிலாளர்களை அழைத்து வந்து கருங்காலிகளாகப் பயன்படுத்த எடுத்த முயற்சியை மின் வாரியத் தொழிலாளர்கள் முறியடித்தனர்!

நகரசபை மின்தொழிலாளர்களின் போராட்டத்திற்கு ஆதரவு தெரிவித்து மதுரை — இராமநாதபுரம் முன் திட்ட சார்பில் தந்தி அனுப்பப்பட்டது.

விடுதலை செய்யப்பட்ட ஐந்து தொழிலாளர்களும்நாளை காலை மதுரை வருகின்றனர். அவர்களுக்கு வரவேற்புக் கொடுக்க மதுரை நகரசபை மின் தொழிலாளர்கள் உற்சாகமுடன் தயாராகிக் கொண்டுள்ளனர்.

## வலது கம்யூனிஸ்டுகளுக்கு தனிக் கட்சி எதற்கு?

புதுடில்லி, பிப். 10—

வரும் பொதுத் தேர்தலில் இந்திரா காங்கிரஸ் கட்சி பல நாடாளுமன்ற இடங்களை வலது கம்யூனிஸ்ட் கட்சிக்கு விட்டுக் கொடுத்திருக்கிறது.

1967-ம் வருட பொதுத் தேர்தலில் 9 மாநிலங்களில் ஆட்சிப் பொறுப்பிலிருந்து நீக்கப்பட்ட காங்கிரஸ் கட்சி அந்த மாநிலங்களில் காங்கிரசல்லாத அமைச்சரவைகளை கவிழ்ப்பதற்கு வலது கம்யூனிஸ்ட் கட்சி பேருதவி புரிந்துள்ளது.

காங்கிரசின் இந்தக் கவிழ்ப்புத் திட்டத்திற்கு பிரதியுபகாரமாக வலது கம்யூனிஸ்ட் கட்சிக்கு இந்திரா காங்கிரஸ் இந்த இடங்களை விட்டுக் கொடுத்துள்ளது.

தற்போது நாடாளுமன்றத்தில் வலது கம்யூனிஸ்ட் கட்சிக்குள்ள 24 இடங்களில் ஒன்றிலகூட இந்திரா காங்கிரஸ் தனது வேட்பாளரை நிறுத்தவில்லை.

வலது கம்யூனிஸ்ட் கட்சிக்கு இந்திரா காங்கிரஸ், பீகாரில் 14 இடங்களையும் உ. பி. யில் 14 இடங்களையும் வங்கத்தில் 9 இடங்களையும் கேரளத்தில் 3 இடங்களையும் விட்டுக் கொடுத்துள்ளது.

## நெல்லிக்குப்பம் தொழிலாளர்கள் கோவிந்தராஜனுக்கு காரும் நிதியும் அன்பளிப்பு

நெல்லிக்குப்பம் தொகுதியில் போட்டியிடும் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் வேட்பாளர் தோழர் சி. கோவிந்தராஜனுக்கு வெற்றி தேடித்தர பாரிக் கம்பெனித் தொழிலாளர்கள் அரும்பாடுபட்டு வருகிருர்கள். நெல்லிக்குப்பம் இ. ஐ. டி. பாரி தொழிலாளர் சங்கம் தன் சங்கத் தலைவருக்கு தேர்தல் நிதியாக ரூ 3000 அளித்திருக்கிருர்கள்

வாக்காளர்களைச் சந்திக்கவும்— தேர்தல் வேலைகளைக் கவனிக்கவும் ஒரு அம்பாசடர் கார் (பழையது) ஒன்றையும்தம் தலைவருக்குப் பரிசாக அளித்தார்கள். இத்தொகுதி சட்டமன்ற தேர்தல் துவக்கவிழாப் பொதுக்கூட்டம் —2—70-ல் நெல்லிக்குப்பத்தில் நடைபெற்றது தோழர் கே. வீரப்பன் தலைமை வகித்தார். அவ்வமயம் தோழர்கள் ஆர். ஏகாம்பரம், டி. ஆர் விசுவநாதன், சி. கோவிந்தராஜன் ஆகியோர் பேசியபின், தேர்தல் இயக்க வேலைகளைத் துவக்கி வைத்து கட்சியின் மாநிலச் செயலாளர் தோழர் எம். ஆர். வெங்கட்ராமன் விரிவாகப் பேசினர்.

மகாராட்டிர மாநிலத்தில்

## இந்திரா காங்கிரசும், சிண்டிகேட் அணியும் ஓரணியில்!

### வலது கம்யூனிஸ்டுகளின் ஏடு குற்றச்சாட்டு!

பம்பாய், பிப். 8—

மகாராட்டிர மாநிலத்தில் இந்திரா காங்கிரசும் சிண்டிகேட் கூட்டணியும் சேர்ந்து செல்வதாக வலது கம்யூனிஸ்டு ஏடு 'நியூ ஏஜ்' குற்றம் சாட்டியுள்ளது.

இதுபற்றி ஜனவரி 31-ம் தேதி இதழில் அது குறிப்பிட்டிருப்பதாவது:—

"பம்பாயில் 'பெருங் கூட்டணி' என்றழைக்கப்படுவது தகர்ந்து வருகின்றது. ஆனல்— தகர்ந்துவரும் இக் கூட்டணிக்குப் புத்துயிரூட்டுவதற்காக ஆளும் காங்கிரஸ் தலைமையின் ஒத்துழைப்புடன்—திரைமறைவில் சாகசங்கள் நடப்பதாக செய்திகள் வந்துகொண்டிருக்கின்றன பம்பாய் பிரதேச ஆளும் காங்கிரஸ் கமிட்டிக்கும், பிற்போக்கு முகாமின் பிதாமகரான சட்கோபாடிலுக்கும், பாசிச சிவசேனை தலைவரான பால்தாக்கரேயிற்கும் இடையில், தொகுதிகளைப் பங்கிட்டுக்கொள்வதில் ஒரு ஒப்பந்தம் ஏற்பட்டிருப்பதாக தெரிய வருகிறது.

இந்தத் திட்டத்தின்படி— வலதுசாரிப் பிற்போக்கு வேட்பாளர்களை வெற்றி பெறச் செய்வதற்காக — பம்பாய் நகரத் தொகுதிகள் அனைத்திலும் செல்வாக்கில்லாத வேட்பாளர்களை நிறுத்த ஆளும் காங்கிரஸ் தீர்மானித்துள்ளது.

இக்கூட்டணியில் ஏற்கனவே சிண்டிகேட்டும், சிவசேனையும், ஜனசங்கமும் இருக்கின்றன. இந்த அசிங்கமான கூட்டிற்கு மகுடம் வைத்ததுபோல— பம்பாய் தொகுதியில போட்டியிடுமாறு தளபதி கரியப்பா வரவேற்கப்பட்டுள்ளார்.

மகாராட்டிரத்தில் சவானுக்கு ஆமாம் சமி போடும் ஆட்களை முடிந்த மட்டில் தேர்ந்தெடுப்பது தான் மராட்டிர மாநில ஆளும் காங்கிரஸ் கமிட்டியின் திட்டம் போல் தெரிகிறது; மேலும், எங்கே ஜனநாயக முற்போக்கு எதிர்ப்பு சக்தியான லைது கம்யூனிஸ்ட் கட்சி பலம்மிருந்து விளங்குகிறதோ அங்கெல்லாம் 'மகத்தான கூட்டணி'யின் வேட்பாளர்கள் வெற்றி பெற வழி வகுப்பது தான மராட்டிய மாநில ஆளும் காங்கிரஸ் கமிட்டியின திட்டம்போல் தெரிகிறது. பிற்போக்காளர்களின் மகத்தான கூட்டணிக்கு மரண அடி கொடுப்பதற்குரிய வரலாற்றுப் புகழ் வாய்ந்த சந்தாப்பத்தை— சவான்— நாயக் தலைமை கடைபிடிக்கும் கொள்கையின் காரணமாக இம்மாநிலத்தில் மீண்டுமொரு முறை இழக்க நேர்ந்துள்ளது'.

"தொழில் நகரமான பம்பாய் நகரத்தில்—மக்களின் நகைப்பிற்கிடமகி வரும் பிற்போக்கு கூட்டணி பலமடைவதற்கு உதவிபுரியும் ஆளும்காங்கிரஸ்—அபாயகரமான விளையாட்டினில் ஈடுபட்டுள்ளது. —என்று வலது கம்யூனிஸ்டுகளின் ஏடு குறிப்பிட்டுளளது"

ஆளும் காங்கிரசும் சிண்டிகேட் அணியும் கொள்கை அளவில் ஒன்றை ஒன்று எதிர்த்துப் போராடாத காரணத்தினல் தான்—ஆளும் காங்கிரசிற்கும் சிண்டிகேட் கூட்டணிக்கும் இடையில் மறைமுகக் கூட்டு ஏற்படுவது சாத்தியமாகிறது!

இதுபற்றி இவ்வளவு எழுதும் வலது கம்யூனிஸ்டுகள் ஆளும் காங்கிரசுடன் சேர்ந்து பாலக்காட்டிலே ஜனசங்க வேட்பாளரை ஆதரிகின்றனர்!

அத்தொகுதியில்மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் தலைவர் தோழர் ஏ. கே. கோபாலன் போட்டியிடுகிருர் என்பது தெரிந்ததே!

## மேற்கு வங்கத்தில் தொழிலாளர்-விவசாயிகள் போராட்டங்களில வெற்றிகள்

கல்கத்தா, பிப். 8—

இந்துஸ்தான் தொழிற்சாலையில இந்தியாவின் பல பகுதிகளிலும் வேலை செய்யும் 40 000 தொழிலளர்கள் அத்தொழிற்சாலையின் பாட்ரேஸ்வர் கிளை மூடப்பட்டதை எதிர்த்து ஜனவரி 15ம்தேதியன்று ஒரு நாள் அடையாள வேலை நிறுத்தம் செய்தனர்.

கதவடைப்பு செய்யப்பட்ட "பசுமதி" பத்திரிகை அலுவலகத்தை திறக்கக்கோரி பிப்ரவர் 3ம் தேதி ஒரு நாள் அடையாள வேலை நிறுத்தம் செய்வதென பத்திரிகைத் தொழிலாளர்கள் முடிவு செய்தனர்.

பாட்டுலி விவசாயப் பண்ணைத் தொழிலாளர் போராட்டமும்குளிர்ப்பதனப் பெட்டி தொழிற்சாலைத் தொழிலாளர் போராட்டமும் வெற்றி வாகை சூடியுள்ளன.

வேலையிலிருந்து நீக்கப்பட்ட ஏழு தொழிலாளர்களை மீண்டும் வேலைக்கு எடுக்கச் செய்வதில் பாட்டுலி விவசாயப் பண்ணைத் தொழிலாளர்கள் வெற்றி பெற்றனர்.

குளிர் பதனப் பெட்டி தொழிற்சாலைத் தொழிலாளர் போராட்டம் காரணமாக தொழிற்சாலையின் சொந்தக்காரர்கள், போராடும் தொழிலாளர்களின் கோரிக்கைகளை ஏற்றுக்கொண்டு ஒப்பந்தத்தில் கையெழுத்திட்டனர்.

11 ஏழை விவசாயிகள் பயிரிட்டு சுமார் 5 ஏக்கர் விளைச்சலை முன்பு இந்நிலத்தை தன் கோரப் பிடியில் வைத்திருந்த ஸ்தல நிலப்பிரபுவிடமிருந்து பெறுவதில், மித்னபூர் மாவட்டத்திலுள்ள பிராதாப் பூர்பகுதி விவசாயிகள் வெற்றி கண்டனர்.



# காவல் நிலையங்களைக் கொலைக் களமாக மாற்றியவர்களுக்கா உங்கள் ஓட்டு?

தீக்கதிர்

"முதலாளி வர்க்கம் குடும்பத்தின் உணர்ச்சி நெகிழ்ச்சித் திரையைக் கிழித்தெறிந்து விட்டது; குடும்ப உறவை வெறும் பண உறவாக்கி விட்டது."

— மார்க்ஸ்— ஏங்கல்ஸ்

## சிண்டிகேட்டின் ஜனநாயகமும் தி. மு. க. வின் முற்போக்கும்

"சர்வாதிகாரத்தை ஒழித்து, ஜனநாயகத்தைப் பாதுகாப்பதுதான் இன்றைய பிரதான கடமை" என்று சிண்டிகேட் காமராசர் சொல்லுகிறார்; சுதந்திரா ராஜாஜி சொல்லுகிறார்; ஜனசங்க வாஜ்பேயி சொல்லுகிறார்.

இந்தக் கூட்டணித் தலைவர்கள் ஜனநாயகத்தையே மனப்பூர்வமாக விரும்புவதாகச் சத்தியமும் செய்கிறார்கள். இவர்களது அந்தரங்க சுத்தியில் மக்கள் நம்பிக்கை வைக்க வேண்டுமாம்!

ஆனால், இவர்களுடைய பூர்வோத்திரம் என்ன என்று நமக்குத் தெரியாதா? எத்தனையோ தொல்லைகளில் கிடந்து உழலும் மக்களுக்கு, எது எதை மனதில் பதித்துக்கொள்ள முடியும்? சீக்கிரமே மறந்துவிடுவார்கள் என்ற துணிச்சலினால்தான் இந்தத் தலைவர்கள் பேத்துமாத்து வேலைகளில் இறங்குகிறார்கள்.

உண்மையில், இவர்கள் ஜனநாயகத்தை நேசிப்பவர்களா? நேசிப்பவர்களா இருந்தால், அவர்களை ஒரே கேள்வி கேட்கிறோம்:

சர்வாதிகாரத்தை எதிர்ப்பதாகச் சொல்லும் ராஜாஜி, சில ஆண்டுகளுக்கு முன்னே, 'இந்தியாவுக்கு இராணுவ ஆட்சிதான் தேவை' என்று வலியுறுத்தவில்லையா?

அதேபோல, வங்கத்திலும் இந்தியா முழுவதும் 1967-க்கு முன்னைய வருடங்களில் தொழிலாளர்களும் அரசு ஊழியர்களும், மாணவர்களும் போராட்டங்கள் நடத்திக்கொண்டிருந்தபோது, காமராசர் என்ன சொன்னார்? "இப்படியெல்லாம் போராட்டங்கள் நடத்தினால், இராணுவ ஆட்சி வரும்" என்று பேசவில்லையா? இப்படி நாம் கேள்வி கேட்டால், அவர் எதற்காகச் சொன்னேன் என்றால் எப்பொழுது சொன்னேன் என்றால்...... என்று என்றால் போடத்தான் முடியுமே தவிர, இராணுவ ஆட்சி பற்றி நான் பேசவில்லை என்று மறுப்புரை கூறமுடியுமா?

அடுத்து, ஜனசங்கத்தைப்பற்றி! அது பிறக்கும்போதே இராணுவ ஆட்சி வேண்டும் என்று பேசிக்கொண்டுதான் பிறந்தது. அது அப்படிப்பட்ட பிறவி. வகுப்புவாதத்தின் உருவம் அப்படித்தான் இருக்கும்.

சிண்டிகேட் கூட்டணியின் லட்சிய லட்சணந்தான் இப்படி!

இனி இண்டிகேட் கூட்டணியிலுள்ள தி. மு. க. வின் முற்போக்கு முழக்கத்தின் லட்சணம் என்ன என்பதை பார்ப்போம்.

இந்திரா காங்கிரஸ் முற்போக்கு என்று கூறி, அதனுடன் தானும் கூட்டு சேர்ந்திருப்பதாக தி. மு. க. தலைவர் கருணாநிதி விளக்குகிறார்.

ஆனால் உண்மை என்ன? பிற்போக்கிலும் பிற்போக்கு, கடைந்தெடுத்த அப்பட்டமான பிற்போக்கான சுதந்திரக் கட்சியை ஐந்து ஆண்டுகளாகக் கட்டி அழுது கொண்டிருக்கவில்லையா? ராஜாஜி என்ற "கண்ணன்" காலடியில் கிடக்கவில்லையா?

இப்பொழுதுதான் என்னவாம்? சுதந்திரா கட்சிக்கு எவ்வளவு தியாகங்கள் செய்தோம், எத்தனை பேர்களுக்கு ஏணியாகவும் தோணியாகவும் இருந்தோம், அப்படியிருந்தும் நன்றி மறக்கலாமா? நம்மை விட்டுப் போகலாமா?' என்று ராஜாஜியைப் பார்த்து கருணாநிதி தொழுது கொண்டுதானே இருக்கிறார்! அழுதுகொண்டுதானே இருக்கிறார்! பிற்போக்கு பிண்டம் தொலைந்தது என்று மகிழ்ச்சியடையவில்லையே! மன அமைதி கொள்ளவில்லையே! இன்னும் ஏங்கத்தானே செய்கிறார்!

சுதந்திராக் கட்சி தி. மு. க. வுடன் சேர்ந்து கொள்ள வருவதாகச் சொன்னால், கருணாநிதி கைகூப்பி வரவேற்காமலா இருப்பார்?

இந்த லட்சணத்தில் முற்போக்காம்! முன்னணியாம்! ஊரை ஏமாற்ற எத்தனை வேடங்களை போடுகிறார்கள் பார்த்தீர்களா?

## ராஜஸ்தான் அரசு தூக்கமும் சவான் வீரப் பிரதாபமும்

பாட்னா, பிப். 9—

"ராஜஸ்தானில் ஒரு ராஜாவுக்கு இன்னமும் 40 ஆயிரம் ஏக்கர் நிலம் இருக்கிறது. இவ்வளவு உபரி நிலத்தை ராஜா வைத்துக்கொண்டிருப்பது நியாயமா? இதற்கு அரசியல் சட்டத்தின் அடிப்படை உரிமைகளின் கீழ் பாதுகாப்பு அளிக்கப்படுவது என்ன நியாயம்?" என்று மத்திய அரசாங்க நிதி அமைச்சர் ஒய். பி. சவான் ஒரு தேர்தல் பொதுக்கூட்டத்தில் பேசியுள்ளார். (இந்தியன் எக்ஸ்பிரஸ் பிப் 10 ம் தேதி)

இராஜஸ்தானில் இத்தனை வருடங்களாகப் பதவியிலிருந்த அரசாங்கம் காங்கிரஸ் அரசாங்கமே. இப்போது பதவியிலிருப்பதும் இண்டிகேட் காங்கிரஸ் அரசாங்கமே.

நிலச்சீர்திருத்தம் செய்வதாக இத்தனை வருடங்களாக காங்கிரஸ் மாநாடுகளிலும் முதலமைச்சர்கள் மாநாடுகளிலும் தீர்மானத்துக்கு மேல் தீர்மானம் போட்ட பின்னும் இராஜஸ்தானிலுள்ள சுகாதியா அமைச்சரவை அது செய்ததென்ன?

அமைச்சர் சவான் குறிப்பிடும் ராஜாவிடமிருந்து 40 ஆயிரம் ஏக்கர் நிலத்தை எடுத்து விவசாயத் தொழிலாளர்களுக்கு வினியோகிக்கவில்லை.

அதற்குப் பதில் கங்கா நகர் பகுதியில் விவசாயத் தொழிலாளர்களை நிலத்தைவிட்டு வெளியேற்றுவதற்காக துப்பாக்கிப் பிரயோகம் செய்து 4 விவசாயத் தொழிலாளர்களின் உயிரைக் குடித்துள்ளது.

இந்திரா காங்கிரஸ் கட்சிக்கு ஓட்டுப்போட்டால் விவசாயிகளுக்கு நிலம் கிடைக்காது, நிலத்துக்காகப் போராடும் விவசாயிகளுக்கு குண்டடிதான் கிடைக்கும் என்பதில் யாருக்கும் சந்தேகம் உண்டா?

# ஐக்கிய முன்னணி ஆட்சியின் சில அனுபவங்கள்!

மேற்கு வங்கத்தில் மார்க்சிஸ்ட் கட்சி தலைமையில் ஐ. மு. ஆட்சி நடைபெற்றபோது போலீஸ் துறைக்கு விதி முறைகள் வகுக்கப்பட்டது. அது— போலீஸ் துறையில் ஒரு பகுதியினருக்கு கடும் கோபத்தையும், ஆத்திரத்தையும் கிளப்பி விட்டது.

அவர்களைப் பொறுத்த மட்டில— இப்மாதிரி செயல்படுவது மிகக் கடினமான காரியமாகும்.

ஆதிமுதற்கொண்டுதாங்கள் மேற்கொண்டு வந்த அடக்குமுறையைக் கைவிடுவது அவர்களுக்கு மிகுந்த கஷ்டத்தை ஏற்படுத்தியது.

மார்க்சிஸ்ட் அமைச்சர்களின் ஆணையின்படி நடக்க போலீஸ் அதிகாரிகள் பல இடங்களில் வெளிப்படையாகவே மறுத்தனர்.

அதற்கு ஒரு உதாரணம் :— மாநில சட்டமன்றக் கட்டிடத்திற்குள் போலீஸ்காரர்கள் புகுந்தனர்; அங்கிருந்த பொருட்களையெல்லாம் அடித்து நொறுக்கினர். சில சட்டமன்ற உறுப்பினர்களைக் கூட அடித்தனர்.

மற்றோர் உதாரணம்:—

மத்திய அரசிற்குச் சொந்தமான காசிபூர் துப்பாக்கித் தொழிற்சாலையில் — மாநில அரசின் கட்டுப்பாட்டிற்குள் இல்லாத மத்திய ரிசர்வ் போலீஸ்படை பயன்படுத்தப்பட்டது.

### பூச்சாண்டி பலிக்கவில்லை

கேரளத்தில் மத்திய அரசு ஊழியர்களைக் கைது செய்யும்படி மத்திய அரசு விடுத்த ஆணையை நிறைவேற்ற இ. எம். எஸ் அரசாங்கம் மறுத்தது. மத்திய அரசின் ஆணையை மாநில அரசு நிறைவேற்றவிட்டால் ஜனாதிபதி ஆட்சியை பயன்படுத்தி ஆட்சியை டிஸ்மிஸ் செய்வோம் என்று மத்திய அரசு பயமுறுத்தியது ஆனால்— மத்திய அரசின் பூச்சாண்டி இ. எம். எஸ். அரசாங்கத்திடம் பலிக்கவில்லை.

### குறுகிய வசதி வெளிப்பட்டது

இந்த ஐ. மு. அரசுகளில் பங்கு கொண்டு பணிபுரிந்ததன் மூலமாக— இந்த அமைப்பின் கீழ் எவ்வளவு குறுகிய எல்லைக்குட்பட்டு செயல்பட வேண்டியதிருக்கிறது என்பதை மக்களுக்கு உணர்த்துவதில் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி வெற்றி பெற்றுள்ளது.

59-ல் கேரள அமைச்சரவையை டிஸ்மிஸ் செய்யப்பட்டது.

1967-ல் மேற்குவங்க அமைச்சரவை டிஸ்மிஸ் செய்யப்பட்டது.

1965-ல் சிறையிலிருந்து கொண்டே கேரள இடைத் தேர்தலில் மிகப் பெரும்பலோடு வெற்றி பெற்ற பின்னர் மார்க்சிஸ்ட் கட்சியை அமைச்சரவை அமைக்க அனுமதிக்கவில்லை. மேற்கு வங்கத்தில் கடந்த ஓராண்டு காலமாய் இடைத் தேர்தல் நடத்த மறுத்தனர். மார்க்சிஸ்ட் கட்சி வெற்றி பெற்றுவிடும் என்று தெரிந்ததால்— அதிகார வர்க்கத்தின் ஆட்சிய தொடர்ந்தது. இன்றைய ஆட்சியின் போலித்தனமான ஜனநாயகத்தை அம்பலப்படுத்த இந்நிகழ்ச்சிகளே போதுமானவை.

ஐ. மு. அரசுகளில் மார்க்சிஸ்ட் கட்சி பங்குகொண்டு பணியாற்றியதின் மூலம்—

ஐக்கிய முன்னணியில் இருந்த பிற கட்சிகளின் உண்மையான வர்க்கத் தன்மையை அம்பலப்படுத்த முடிந்தது. ஏனெனில்— மார்க்சிஸ்ட் கட்சியைத் தவிர பிற கட்சிகள் அனைத்தும்— பண உதவிக்கும், அரசியல் ஆதரவிற்கும் பணக்கார விவசாயிகளையே சார்ந்துள்ளனர்.

அதனால்தான்— வங்கத்தின் நெல் வயல்களிலே நடந்த வர்க்கப் போராட்டத்தை இவர்களால் சகிக்க முடியவில்லை. அதனால்தான் கிராமப்புறங்களுக்கு பயனளிக்கும் சீர்திருத்தங்களை அவர்கள் எதிர்த்தார்கள்.

ஆனால்— பதவியில் ஒட்டி இருக்க வேண்டும் என்ற ஒரே நோக்கத்திற்காக— தனது திட்டத்தை மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி தளர்த்திக் கொள்ளவில்லை; பொய் வாக்குறுதிகளை அளிக்கவில்லை; ஒவ்வொரு பிரச்னையும் மந்திரிசபையில மட்டும் விவாதிக்கப்படவில்லை; பொதுமக்களிடத்திலும் விவாதிக்கப்பட்டது. பொதுக்கூட்டங்கள் மூலமாகவும், பார்க் குணமிக்க நடவடிக்கைகள் மூலமாகவும் இதனை விவாதிக்கும்படி உற்சாகமூட்டினோம்.

பிற கட்சிகளின் தலைவர்கள் இதனை அறிந்து கொண்டனரோ இல்லையோ— எல்லாக் கட்சிகளின் அணிகளையும் வெகுஜன இயக்கங்கள் ஒன்றுபடுத்தன.

இது ஒரு நல்வாய்ப்பாக மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சிக்கு அமைந்தது. தொன்றுதொட்டு நிலப்பிரபுத்துவ கட்சிகளின் பிடிப்பினில் இருந்து வரும் இடங்களில் எல்லாம் மார்க்சிஸ்ட் கட்சி ஊடுருவுதற்கு ஐக்கிய முன்னணி தந்திரம் உதவியது.

இக்கட்சிகள்— இன்னும் கூட ஒருசில இடங்களில் சாதாரண மக்களிடம் நல்ல செல்வாக்குடன் விளங்குகின்றன என்பதை நாம் மறந்து விடக்கூடாது.

தேர்தலுக்கு முன்பு வகுக்கப்பட்ட ஐக்கிய முன்னணித் திட்டத்தினை ஏற்று இக்கட்சிகள் அனைத்தும் கையொப்பமிட்டுள்ளன: ஆனால்— அத்திட்டங்களை நிறைவேற்றும் பிரச்னை வருவதற்கு முன்பே —தங்களது தொழிலாளர் விரோதக் கொள்கையையும். இக்கட்சிகள் வெளிப்படுத்தின.

பிற்போக்குக் கட்சிகளுடன் கூட்டுச் சேர்ந்து— உத்திரப்பிரதேசத்திலும் பீஹாரிலும் ஐக்கிய முன்னணி அரசாங்கங்களில் வலது கம்யூனிஸ்டுகள் பங்குகொண்டனர். ஆனால் —வலது கம்யூனிஸ்டுகளுக்கு நேர்மாறான விதத்தில்—எங்கு தான் பெரும்பான்மை சக்தியோ— அந்த மாநில ஐக்கிய முன்னணி அரசுகளில் மட்டுமே மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி பங்கேற்றது.

பிற கட்சிகளுக்கு வால் பிடிப்பதற்குப் பதிலாக கொள்கைகளைத் தீர்மானிக்கும் பிரதான சக்தியாக நாம் எங்கு திகழ்ந்தோமோ— அம்மாநில அரசுகளில் மட்டுமே மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி பங்கு கொண்டது

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியும் பங்கு கொண்ட அரசாங்கங்கள்— மக்களின் அடிப்படை வாழ்க்கை நிலையை மாற்றி விடவில்லை என்பது உண்மைதான்! உண்மையில், அதை நாம் எதிர்பார்க்கவுமில்லை.

மாறாக— மத்திய அரசு காட்டிய பாரபட்சத்தின் காரணமாக— ஐ. மு. ஆட்சிக் காலத்தின்போது மேற்கு வங்க மக்களும் கேரள மக்களும் மேலும் கஷ்டத்தை அனுபவிக்க நேர்ந்தது,

அற்புதங்களைச் சாதிப்போம் என்று மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி வாக்குக் கொடுத்தால்— அது கட்சி ஊழியர்களிடமும். பொதுமக்களிடமும் பிரமையை ஏற்படுத்துவதாகும்.

எனவே— இத்தகைய மந்திரி சபையில் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி பங்குகொண்டதானது— கட்சியின் பல்வேறு வெகுஜன நடவடிக்கைகளிலும், அரசியல் போராட்டங்களிலும் ஒன்றாகும்.

ஒருமுறை மக்கள் அரசியல் விழிப்பு அடைந்துவிட்டார்களேயானால்— அதன் பின் அவர்களது உறுதியை எந்த அடக்குமுறையினாலும் அசைக்க முடியாது.

# நெய்வேலி-வடலூர் சைக்கிள் படை தேர்தல் வேலையில் மும்முரம்

## தோழர். எஸ். நடராஜனுக்கு எங்கும் உற்சாக வரவேற்பு!

நெய்வேலி மிக முக்கியமான இடம். மின் நிலையமும் லிக்னைட் கரி ஆலையும், உரத் தொழிற்சாலையும் உள்ள நகரம் மட்டுமல்ல.

இவற்றையெல்லாம் உற்பத்தி செய்யும் தொழிலாளர்கள் வாழும் இடமுமாகும். அதுமட்டுமல்ல. ஓராண்டுக்கு முன்னால், பழிவாங்குதலை எதிர்த்தும், ஊதிய வெட்டை எதிர்த்தும் வீரஞ் செறிந்த 17000 தொழிலாளர்கள் போராட்டம் நடத்திய இடமும் இதுதான!

கூலி உயர்வு கோரிப் போராடிய அந்த வீரமக்களின் கோரிக்கைகளை நிறைவேற்றுவதற்குப்பதிலாக- தி. மு. க. அரசு போலீசை ஏவி திரும்பத் திரும்ப துப்பாக்கியால் சுட்ட இடமும் இது தான்!

10, 15 மைல் சுற்று வட்டாரத்துக்கு போக்குவரத்து எதுவுமே இல்லாதபடிச்செய்து வீடுவீடாய், குடிசை குடிசையாய் கடை கடையாய்ச் சூறையாடப்பட்ட இடமும் இது தான்! சென்னையிலே கண்ணகிக்குச் சிலை வைத்தவர்கள். நெய்வேலியிலே கற்பைக் கொலை செய்ய பட்டாளத்தை அனுப்பிய இடமும் இது தான்!

கூலி உயர்வு கேட்ட தேவன்பு குண்டுக்கு இறையான இடமும்-தொட்டில் குழந்தை எட்டி உதைக்கப்பட்டு மாண்ட இடமும் இது தான!

### உடன் இருந்தோம்; உதவி புரிந்தோம

அந்தப் போராட்டத்தின் போது மரணத்தையும் துட்சமாக மதித்து, போலீஸ் முற்றுகையை ஊடுருவி இரத்தம் வடித்துக் கொண்டிருக்கும் தொழிலாளர்களுக்கு ஆதரவு அளித்தவர் நாம்; ஆறுதல் உரைத்தவர்நாம்: அடக்குமுறையை எதிர்த்துப்போராடியவர்நாம்; நமது மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்டு கட்சி! அதன் தென்னாற்காடு மாவட்டச் செயலாளர் தோழர். எஸ். நடராஜன் நெய்வேலி அடங்கிய பண்ருட்டி தொகுதியில் போட்டியிடுகிறார்.

### தொழிலாளர்களின் பேராதரவு

தோழர். எஸ். நடராஜனை ஆதரித்து தொழிலாளர்களும் மாணவர்களும் ஆர்வமுடன் தேர்தல் பணி ஆற்றி வருகிறார்கள்: நிதியும் அளித்து வருகிறார்கள்.

தோழர். நடராஜனை ஆதரித்து, நெய்வேலி திரு. வி. க. திடலில் தோழர் காசிநாதன் தலைமையில் தேர்தல் துவக்க விழா பொதுக் கூட்டம் 9-2-71-ல் நடைபெற்றது. தோழர்கள் கே. வீரபத்திரன், எஸ். குப்புசாமி, எஸ் நடராஜன் ஆகியோர் பேசிய பிறகு, கட்சியின் மாநிலக்குழு உறுப்பினர் தோழர். என். சங்கரைய்யா விரிவாகப்பேசினார்.

அன்று முற்பகலில் நெல்லிக்குப்பத்திலும், நெய்வேலியிலும் நடந்த கட்சி ஊழியர்கள் கூட்டத்தில் தோழர். என். சங்கரைய்யா தேர்தல் கொள்கைகளை விளக்கிப் பேசினார்.

### நிதியளித்தனர்

தோழர். என். நடராஜனை வெற்றிபெறச் செய்வதற்காக, நெய்வேலித்தொழிலாளர்களும் அண்ணாமலைப் பல்கலைக் கழக மாணவர்களும் நிதி உதவி அளிப்பதிலும் தேர்தல் வேலைகளைச்செய்வதிலும் ஆர்வம் காட்டி வருகிறார்கள்.

நெய்வேலி தொழிலாளர்கள் இதுவரை ரூ. 2000 கொடுத்திருக்கிறார்கள். வடலூர் தொழிலாளர்கள் ரூ. 2009 அளித்திருக்கிறார்கள். விழுப்புரம் ஷாவாலஸ் தொழிலாளர்கள் ரூ 100-ம் புதுவைத் தொழிலாளர்கள் ரூ. 200-ம் வசூலித்துக் கொடுத்திருக்கிறார்கள். இன்னும் வசூலில் தீவிரமாக இறங்கி இருக்கிறார்கள்.

### அண்ணாமலை மாணவர்கள்

அண்ணாமலைப்பல்கலைக் கழக மாணவர்கள் ரூ. 200 வசூலித்து முதல்தடவையாகக் கொடுக்கிறார்கள். இன்னும் தொடர்ந்து வசூலித்து வருகிறார்கள். இவர்கள் நடராஜனுக்கு நிதி உதவியதோடு, நெல்லிக்குப்பம் தோழர். சி. கோவிந்தராஜனுக்கு ஜாமீன் பணமும் கட்டியிருப்பதாகச் செய்தி கிடைத்திருக்கிறது.

### பண்ருட்டியில்

பண்ருட்டியில் 1-2-71-ல் தோழர். நாகராஜன் தலைமையில் தேர்தல் பொதுக்கூட்டம் நடந்தது. தோழர்கள் ஆர். ஏகாபரம், பி. தங்கராசு, வடலூர் சிதம்பரம் எஸ். நடராஜன் ஆகியோர் பேசினார்கள்.

பொதுக்கூட்டத்திற்கு முன்பு, வடலூரிலிருந்தும் நெய்வேலியிலிருந்தும் தொழிலாளி வர்க்க இளைஞர்கள் சைக்கிள்களில், வழியெல்லாம் முழக்கொலி எழுப்பி பண்ருட்டி நகரையும் குலுக்கி விட்டனர்.

நெய்வேலி வடலூர். நெல்லிக்குப்பம். பண்ருட்டி, காயாம்புலியூர் ஆகிய இடங்களில் தேர்தல் அலுவலகங்கள் திறக்கப்பட்டுள்ளன.

தோழர்கள். நடராஜனும் கோவிந்தராஜனும் கிராமங்களிலெல்லாம் சென்று ஆதரவு கோரி வருகின்றனர்.

## மார்க்சிஸ்ட் ஊழியர்கள்மீது பொய் வழக்கு!

நாகபட்டினம், பிப், 9—

நாகை தாலுகா வலிவலம் போலீஸ் சரகம் நாட்டறுப்பு என்ற கிராமத்தில், தி. மு. க. கொடியை "திருடிவிட்டதாக" நமது விவசாய தொழிலாளர் சங்க உறுப்பினர்களான தோழர்கள் காத்தானும், மாரியும் கைது செய்யப்பட்டிருக்கிறார்கள்.

இருவரும் திருவாரூர் நகரத்தில் தங்கி இருக்கவேண்டுமென்ற நிபந்தனையின்பேரில் விடுதலை செய்யப்பட்டிருக்கிறார்கள். தேர்தல் நெருங்கும் நேரத்தில் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட்கட்சியைச்சேர்ந்த ஊழியர்கள்மீது பொய்வழக்குகள் போட்டு, அவர்களை தேர்தல் இயக்கத்திலிருந்து பிரிக்கும் போக்கு நாகை தாலுகாவில் ஆரம்பமாகி உள்ளது.

## மார்க்சிஸ்ட் ஊழியர்கள் மீது தாக்குதல்!

நாகப்பட்டினம், பிப். 9—

நாகை தாலுகா கீவளூர் போலீஸ் சரகம் கூத்தூர் என்ற கிராமத்தில் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி ஊழியர்கள் 17 பேர் தி. மு. க. வினரால் தாக்கப்பட்டுள்ளனர். தாக்கப்பட்ட தோழர்கள் காவல் நிலையத்தில் புகார் கொடுத்த போது, தாக்கியவர்களைக் கைது செய்வதற்குப் பதிலாக, தாக்கப்பட்டவர்களையே போலீஸ் கைது செய்துள்ளது. தோழர்கள் ஜாமீனில் விடுதலையாகி உள்ளனர்.

# குறிப்புகள்

## விமானக் கடத்தலும் சூழ்ச்சியும்

இந்திய விமானம் பாகிஸ்தானுக்குக் கடத்தப்பட்டு லாகூரில் கொளுத்தப்பட்ட சம்பவம் இந்தியப்பிற்போக்கு சக்திகளுக்கு வரப்பிரசாதமாக வந்துள்ளது.

இந்த விமானம் கடத்தப்பட்டதால் ஏற்பட்ட சேதத்தைவிட, இப் பிரச்னையை வைத்து வட மாநிலங்களில் முஸ்லீம் மக்களுக்கு எதிராக இந்துக்களைக் கிளப்பி விட்டு ஓட்டுக்கள் வாங்குவதை பெரும் லாபமாக அவர்கள் கருதுகிறார்கள்.

இந்தப் பிரச்னையில் முதலெடுப்பதற்கு ஜனசங்கமும் இந்திரா காங்கிரசும் போட்டிபோடுகின்றன.

விமானக் கடத்தல் நிகழ்ச்சிக்குப் பின்னாலிருந்து கொண்டு, இந்தியாவுக்கும் பாகிஸ்தானுக்குமிடையே உறவு சீர்படுவதைத் தடுப்பதற்கும் இரு நாட்டு மக்களையும் மேலும் தவிட்டு மக்களைப் பாதிக்கும் பிரச்னைகளிலிருந்து அவர்களைத் திசை திருப்பி விடுவதற்கும் சதி செய்யும் பிற்போக்கு சக்திகளின் ஏஜெண்டுகள் வேலை செய்கிறார்கள்.

விமானம் கடத்தப்பட்ட அடாதசெயலைக்கண்டிக்கும் போதே, இந்நிகழ்ச்சியை வைத்துக்கொண்டு, ஆதாயம் தேடப் பார்க்கும் பிற்போக்காளர்களுக்கு எதிராக நாம் விழிப்புடன் இருக்கவேண்டியது அவசியமாகும்.

### மால்டா மாவட்டத்தில்

## வலது கம்யூனிஸ்டுகள் அடியோடு ராஜினாமா!

### காங்கிரசுடன் கூட்டுச் சேர எதிர்ப்பு!

கல்கத்தா பிப் 10—

மேற்கு வங்கத்தில் மால்டா மாவட்டத்தில் மாவட்ட தலைவர்கள் உள்ளிட்ட வலது கம்யூனிஸ்ட் கட்சி உறுப்பினர்கள், அக்கட்சியிலிருந்து ராஜினாமா செய்துள்ளார்கள். அவர்கள் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட்கட்சியில் சேர்ந்து செயல்பட போவதாகவும் அறிக்கை விட்டுள்ளார்கள்.

இதனால், வலதுகம்யூனிஸ்ட் கட்சியில் சலசலப்பு ஏற்பட்டுள்ளது.

ராஜினாமா செய்தவர்களில் முன்னாள் சட்ட மன்ற உறுப்பினர் நியாய் மருபுப் உட்பட மாவட்ட செயற்குழு உறுப்பினர் மூவரும் உள்ளனர்.

மாவட்ட கமிட்டியில் அங்கம் வகித்த 29 பேரில், 22 பேரும் ராஜினாமா செய்தவர்களில் உள்ளனர்.

மற்றும், முன்னாள் சட்ட மன்ற உறுப்பினர் சர்க்கார் மருமாவும் ராஜினாமா செய்துள்ளார்.

காங்கிரஸ் கமிட்டியுடன் கூட்டுச்சேருவதை ஆரம்பத்திலிருந்து மால்டா மாவட்டக் கமிட்டியினர் எதிர்த்துவந்துள்ளனர்.

மாவட்டத்திலுள்ள 1100 உறுப்பினர்களும் வலது கம்யூனிஸ்ட் கட்சியிலிருந்து விலகி விட்டதால், அந்தக் கட்சி இருந்த இடம் தெரியாமல் போய் விட்டது.

## தி. மு. க. வும் எலிக் கறியும்

"ஓட்டளிக்கும் முன் ஒரு கணம்" என்னும் தலைப்பில் 10—2—71-ம் தேதி தி. மு. க. ஏடான முரசொலியில், காங்கிரசு அரசின் கடந்த கால செயல்களைப் பற்றி பட விளக்கங்களுடன் விமர்சனம் வந்துள்ளது.

அவ் விமர்சனம் இதோ.......

"இந்தக் கூட்டம் — கொளுத்தும் வெய்யிலில்ஏன் நிற்கிறது தெரியுமா?

அரிசிக்கு...... எந்த ஆட்சியில்?

புண்ணியவான்களான காங்கிரஸ் ஆட்சியில். அவ்விதம் அரிசி கிடைக்காதபோது...... அன்றைய ஆட்சியாளர்கள் என்ன செய்தார்கள் தெரியுமா?

திங்கட்கிழமை — வியாழக்கிழமை பட்டினி கிடக்கச் சொன்னார்கள்.

பகாளாபாத் — கீரை மசியல் சாப்பிடுங்கள் அரிசிக்குப் பதிலாக என்று கூறினர்.

இன்னொரு அமைச்சரோ — அரிசி கிடைக்கவில்லையா — பால் பழம் சாப்பிடுங்கள் என்றார்.

இதைவிட—உத்திரப்பிரதேசத்துக் காங்கிரஸ் அமைச்சர் ஜெண்டா சிங் ' எலிக்கறி — எலி மசாலா — எலி வறுத்த கறி — எலி பொடிமாஸ் " சாப்பிடுங்கள் என்றார்.

மக்கள் விரோத காங்கிரஸ் ஆட்சியின் கடந்த கால செயல்களைப் பற்றி இவ்வாறெல்லாம் விமர்சனம் செய்யும் தி. மு. க. வினர், இன்று எதனுடன் சேர்ந்து தங்கள் கூட்டணியை அமைத்துள்ளனர்?

அரிசி கிடைக்காதபோது திங்கட்கிழமை—வியாழக்கிழமை மக்களைப் பட்டினி கிடக்கச் சொன்ன அதே காங்கிரசுடன்தான்!

அரிசிக்குப் பதிலாகப் பகாளாபாத்—கீரை மசியல் சாப்பிடச் சொன்ன அதே காங்கிரசுடன்தான!

அரிசிக்குப் பதிலாக பால்—பழம் சாப்பிடச் சொன்ன அதே காங்கிரசுடன்தான்!

உணவுப் பஞ்சத்தைத் தீர்க்க, எலிக்கறி—எலி மசாலா— எலி வறுத்த கறி — எலி பொடிமாஸ்' சாப்பிடுங்கள் என்று சொன்ன அதே காங்கிரசுடன்தான்!

அன்றைய ஒன்றுபட்ட காங்கிரசின் ஆட்சியில்தானே காங்கிரஸ் மந்திரிகள் இவ்வாறெல்லாம் பேசினர்? அதில் சிண்டிகேட் காங்கிரசுக்கும்—இண்டிகேட் காங்கிரசுக்கும் சமபங்கு உண்டல்லவா?

அன்றைய ஒன்றுபட்ட காங்கிரசின் அகில இந்திய தலைவராக இன்றைய சிண்டிகேட் காங்கிரஸ் தலைவர்களில் ஒருவரான காமராஜ் இருந்தார். மத்திய அரசில் ஒரு அமைச்சராக இன்றைய இண்டிகேட் தலைவி இந்திரா காந்தி இருந்தார். தமிழக மக்கள் திங்கட்கிழமை வியாழக்கிழமை உண்ணாவிரதம் அனுஷ்டிக்க வேண்டும் என்று கூறியவர் — அன்று தமிழகத்தின் முதலமைச்சராக விளங்கிய திருவாளர் பக்தவத்சலம்தானே?

இவ்வாறிருக்க, காங்கிரசின் ஒரு பிரிவான இண்டிகேட் காங்கிரசை முற்போக்கானது என்று கூறிக்கொண்டு அதனுடன் இணைந்து தி. மு. க., முற்போக்குக் கூட்டணி அமைத்திருப்பது வேடிக்கையாக இல்லையா?

# பசுமைப் புரட்சித் திட்டமும் வேலையில்லாத் திண்டாட்டமும்

பசுமைப் புரட்சி என்றால் என்ன? தற்போதைய நிலக் குத்தகை முறையிலோ உற்பத்தியைப் பங்கிட்டுக் கொள்வதிலோ எந்தத் தீவிர மாறுதலையும் அது செய்யவில்லை. சில விவசாயிகள் டிராக்டர்களையும் மற்ற நவீனக் கருவிகளையும் பயன்படுத்தினாலும் அவர்களுடைய எண்ணிக்கை மிகக் கொஞ்சமே. வீரிய விதைகளை பயன்படுத்துவதையும் இரசாயன உரம் போடுவதையும் பாசன வசதியை பயன்படுத்துவதையும் மட்டுமே பசுமைப் புரட்சி' என்று சொல்லப்படுகிறது இந்தப் புதிய திட்டமும் கோதுமை பயிரிடுவதற்கு மட்டுமே பொருந்துவதாகும். நெற்பயிருக்கு புதிய விதைகள் இன்னமும் உபயோகமாகவில்லை. அதிக மகசூல் காண்பதற்காக மற்ற நாடுகளின் விதைகளை நம் நாட்டிலும் உபயோகித்துப் பார்த்திருப்பினும் மண் மாறுதல் காரணமாக அவை பொருந்தவில்லை. "கோதுமை உற்பத்தியில் கண்டது பால் அரிசி உற்பத்தியிலும் முன்னேற்றம் காண்பதற்கு புதிய ஸ்தல நிலைமைகளுக்கேற்ற நெல் விதைகளை உபயோகிப்பதில் இந்தியா இன்னமும் பல வருடங்கள் பின் தங்கியிருக்கிறது' என்று எம் இ. எபல் என்ற நிபுணர் கூறுகிறார். நம் நாட்டின் மொத்த உணவு உற்பத்தியில் நெல் உற்பத்தி 40 சத விகிதமாகவும் கோதுமை உற்பத்தி 20 சத விகிதமாகவும் இருப்பதால் இப்புதிய திட்டத்தின் மூலம் உணவுத் தேவையில் தன்னிறைவு பெறுவது இயலாததாக இருக்கிறது.

## மூலதன வசதியின்மை

கோதுமைக்கு வீரிய விதைகளைப் பயன்படுத்துவதும் இரசாயன உரமும், பாசன வசதியும் போதிய அளவு கிடைக்கும் இடங்களிலேயே சாத்தியமாகக்கூடியதாக இருக்கிறது. பஞ்சாபிலும் அரியானாவிலும் இத்துறையில் முன்னேற்றம் ஏற்பட்டதற்குக் காரணம் அங்கு பாசன வசதி இருந்தமையாலும் இரசாயன உரம் வாங்குவதற்கு மூலதனம் கிடைத்தமையாலும் ஆகும் இந்த இரு மாநிலங்களில் ஏற்பட்ட முன்னேற்றத்தை மற்ற இடங்களில் காண முடியாமல் போனதற்கு காரணம் இந்த இரு அம்சங்களும் இல்லாதிருந்ததேயாகும்.

"பசுமைப் புரட்சி'' திட்டத்தின் மூலம் நல்ல விதைகளைப் பயன்படுத்தி உற்பத்தியைப் பெருக்குவது மேற்கூறிய இரு அம்சங்களில் கட்டுப்படுத்தப்பட்டிருப்பினும் இதனால் பல தீங்கான விளைவுகளும் ஏற்படுகின்றன இந்தத் தீங்கான விளைவுகளை ஆராயும் முன் நிலத்தின் விளைச்சல் சக்தியை அதிகரிப்பதைப் பற்றி ஆராய்வோம்.

## விளைச்சலை அதிகரிக்க முடிந்ததா?

1951-65 ஆண்டுகளிடையே விவசாய உற்பத்தி 3.1 சத விகிதம் உயர்ந்துள்ளது. இதில் 1.33 சத விகித உயர்வு தான் நிலத்தின் விளைச்சல் சக்தி அதிகரிப்பால் ஏற்பட்டதென்றும் நிலப்பரப்பு அதிகரிப்பால் 1.4 சத விகித உயர்வும் பயிர் முறையில் மாறுதலால் 0.37 சத விகித உயர்வும் ஏற்பட்டதென்றும் அரசாங்க புள்ளி விவரங்கள் கூறுகின்றன.

மூன்றாவது திட்ட முடிவில் பயிரிடும் நிலத்தின் அளவு உச்ச கட்டத்தை அடைந்துவிட்டதால் இனிமேல் பயிரிடுவதற்கான அதிக நிலம் இல்லை, ஆகவே நிலத்தின் விளைச்சல் அளவை அதிகரிப்பதின் மூலமே உணவு உற்பத்தியைப் பெருக்க முடியும்.

1973-74ம் ஆண்டில் மொத்த உணவு உபயோகம் 12 கோடியே 90 லட்சம் டன்னாக இருக்குமாதலால் உணவில் தன்னிறைவுத் திட்டத்தை நிறைவேற்றுவதற்கு ஆண்டுதோறும் 5 சத விகித அதிகரிப்பு ஏற்படவேண்டும் (1951-65 ஆண்டுகளில் 1.33 சத விகித அதிகரிப்புதான் ஏற்பட்டுள்ளது.) மேற்கூறியிருந்தபடி நல்ல விதைகளால் மட்டும் நிலத்தின் விளைச்சல் சக்தியை நான்கு மடங்காகக் கூட்டிவிட முடியாது.

## நில வெளியேற்றம் வேலையில்லாத் திண்டாட்டம்

மக்களை ஏமாற்றுவதற்கு ஒரு பக்கம் "பசுமைப் புரட்சி'' கோஷம் போடப்படும் போதே வரம்புக்குட்பட்ட பகுதியில் இது அமுல் படுத்தப்படுகையில் கிராமப்புற மக்களுக்கு துயரமும், வேலையில்லாத திண்டாட்டமும் நில வெளியேற்றமும் ஏற்பட்டுள்ளன. இந்தப் "பசுமைப் புரட்சி'' பணக்காரர்களுக்கும் ஏழை மக்களுக்கும் இடையே வித்தியாசத்தை அதிகப்படுத்தியுள்ளது. நில வெளியேற்றத்தின் மூலம் குத்தகை உரிமை பறிக்கப்பட்டு ஏழை விவசாயிகள் விவசாயத் தொழிலாளர்களின் நிலைக்குத் தள்ளப்பட்டிருக்கின்றனர்.

வேலையை மிச்சப்படுத்தும் புதிய கருவிகளின் மூலம் வேலையில்லாத் திண்டாட்டம் ஏற்பட்டுள்ளது. முன்னாள் குத்தகைதாரர்களும், விவசாயத் தொழிலாளர்களும் வேலையில்லாதோர் அணி வரிசையில் இப்போது சேர்ந்துள்ளனர். வேலையில்லாதோருக்கு வேலை தருவதற்குப்பதில் "பசுமைப் புரட்சி' பலருடைய பிழைப்பைக் கெடுத்திருக்கிறது,

இந்தத் திட்டத்தில் விவசாயத் தொழிலாளர்களின் துயரம் பெருகியுள்ளது விலைவாசி உயர்வுக்கும் வாழ்க்கைச் செலவு அதிகரிப்புக்கும் ஏற்ற வண்ணம் கிராமப்புறத் தொழிலாளர்களின் ஊதியம் உயரவில்லை என்பதை, பல ஆய்வுகள் வெளிப்படுத்தியுள்ளன. பஞ்சாபில் வாழ்க்கைச் செலவு அதிகரிப்புக்கு ஏற்றபடி கிராமப்புறத் தொழிலாளர்களின் கூலி உயரவில்லை. அதே மாதிரியே, பீகாரிலும் உயரவில்லை. தஞ்சையில் உண்மைக் கூலி சிறிது உயர்ந்திருப்பினும் பணக்கார விவசாயிகளின் லாபம் பலமடங்கு அதிகரித்திருப்பதால் விவசாயத் தொழிலாளர்கள் நிலை தாழ்ந்துள்ளது.

"பசுமைப் புரட்சி'' கிராமப்புற பணக்காரர்களுக்கும் ஏழை மக்களுக்கும் இடையே வித்தியாசத்தைப் பெருக்கியுள்ளது. பாங்குகள் தேசவுடமையாக்கப்பட்டிருப்பினும் சிறிய விவசாயிகளுக்குக் கடன் கிடைக்கவில்லை

இந்தியாவில் நிலத்தின் விளைச்சலை அதிகரிப்பதும் உற்பத்தியைப் பெருக்குவதும் இயலாததல்ல. 70 சத விகித மக்கள் விவசாயத்தில் ஈடுபட்டிருக்கும்போது, நம் நாட்டின் தேவைகளைப் பூர்த்தி செய்து கொள்ளுவதுடன் ஏற்றுமதி செய்யும் நிலையிலும் இருக்க வேண்டும். ஆனால், அதற்கான உற்சாகத்தை அரசு மக்களிடம் ஏற்படுத்தவில்லை — பி டி.

## 10-வது நாள் பித்தளைப் பாத்திர தொழிலாளர் போராட்டம்!

மதுரை, பிப்:—10

மதுரையில பித்தளைப் பாத்திரத் தொழிலாளர்கள் இன்று 10-வது நாளாக வேலை நிறுத்தம் செய்து வருகின்றனர் மார்க்சிஸ்ட் கட்சியை ஆதரிக்கும் மதுரை நகர பித்தளைப் பாத்திரத் தொழிலாளர் சங்கத்தைச் சேர்ந்த தொழிலாளர்களும், இண்டிகேட்டையும் தி. மு. க. வையும் ஆதரிக்கும் மதுரைநகர் திராவிட பித்தளை பாத்திர முன்னேற்ற சங்கத் தொழிலாளர்களும் இப் போராட்டத்தில் இணைந்து நிற்கின்றனர்!

கூலி உயர்வு கோரி இப் போராட்டம் நடைபெறுகிறது

## லாவோசில் அமெரிக்கப் படைகளுக்கு பலத்த அடி!

டோக்கியோ, பிப். 10— லாவோசுக்குள் புகுந்த ஆக்கிரமிப்புப் படைகள் துவம்சம் செய்யப்பட்டதாக பாதட் லாவோ ரேடியோ செய்தி கூறுகிறது.

### சேத விவரம்!

லாவோசுக்குள் வந்த 4000 பேர் உயிரிழந்தனர். மற்றும் 29 அமெரிக்க விமானங்கள் சுட்டு வீழ்த்தப்பட்டன. 1100 துப்பாக்கிகளும் 10 டிரக்குகளும் பிடிபட்டன.

இதப் பெருஞ்சேதம் ஏற்பட்டதால் ஆக்கிரமிப்புப் படைகள் லாவோசுக்குள் முன்னேறிச் செல்ல முடியவில்லை.

# உலக அரங்கில்

## இஸ்ரேலில் தொழிலாளர் வேலை நிறுத்தங்கள்

"ஆசியாவும் ஆப்பிரிக்காவும், தங்களுடைய பொருளாதார முன்னேற்றத்திற்கு, முன்னோடியாக இஸ்ரேல் நாட்டைப் பின்பற்ற வேண்டும்'' என்ற போலிக்கருத்தை அமெரிக்க ஏகாதிபத்திய வட்டாரங்களும் முதலாளி வர்க்க செய்தி நிறுவனங்களும் பரப்பி வருகின்றன. ஆனால், அங்குள்ள உண்மையான நிலைமை என்ன? வானளாவிய விலை ஏற்றங்களும், வேலையில்லா நிலைமையும், குறைந்த கூலியும் தான். இஸ்ரேல் அரசு தொழிற்சங்க உரிமைகளை அங்குள்ள மக்களுக்கு கொடுக்கவில்லை எனினும், மக்கள் சங்கங்களுடைய வேலை நிறுத்த போராட்டங்கள் மூலம் உறுதியை வெளிக்காட்டி வருகின்றனர்.

தொழிலாளர்கள், ஆசிரியர்கள். மின்ஊழியர்கள், தபால் தந்தி, மருத்துவ ஊழியர்கள் இயக்கத்தினால் இஸ்ரேல் அரசு தற்போது நிலைகுலைந்துள்ளது அரசின் ஊதிய குறைப்புப் வரி உயர்வும் கொள்கைகளை எதிர்த்து, மக்கள் கிளர்ந்தெழுந்துள்ளார்கள்.

அமன் கேப்பிலியக் என்பவர் 'லீ மாண்டி' பத்திரிகையில் இஸ்ரேலின் உள்நாட்டு விவரங்களை விளக்கி ஒரு கட்டுரை எழுதியுள்ளார் அதில் 1970-ல் ஆகஸ்ட் யுத்தத்துக்குப்பின் இஸ்ரேலில் மக்கள் போராட்டங்கள் வெடித்துள்ளன. அதனால் அரசு நெருக்கடிக்கு உள்ளாகியுள்ளது என்று அவர் கூறுகிறார்.

### தொழிலாளர் ஸ்டிரைக்

1970-ல், சம்பள உயர்வு கோரி, 11,000 மருத்துவ நிலைய தொழிலாளர்கள் வேலை நிறுத்தம் செய்தார்கள். தொழில் நுணுக்க விவசாய நிறுவனங்களைச் சேர்ந்த 7000 ஊழியர்கள், 6 வார காலமாக அவர்களுடைய கோரிக்கைகளை முன் வைத்து போராடினார்கள்-முழு வெற்றியடையும் வரை போராடினார்கள்,

லீ மாண்ட்—பத்திரிகை மேலும் கூறுவது: 1966-ல் 86,000 பேர் வேலை நிறுத்தம் செய்தார்கள், போர்க்காலமாகிய 1967—ல் 25,000 பேர் வேலைநிறுத்தத்தில் பங்கு கொண்டனர். 1968-ல் 42,000 பேர் வேலைநிறுத்தங்களில் பங்கு கொண்டனர்- இதனால், 101 வேலை நிறுத்தங்களில் 73,000 மனித உழைப்பு நாட்கள் நட்டமாயின. இது சென்ற ஆண்டைக் காட்டிலும் 41 சதவீதம் அதிகமாகும்.

சம்பளம் வாங்குபவர்களில் 75 சதவீதம் அரசுக் கொள்கைகளால் பாதிக்கப்பட்டுள்ளார்கள். யுத்தத்தில் ஏற்பட்ட பளுவைக்காட்டிலும் பெரும் வணிக நிறுவனங்களின் சுரண்டலால்தான் மக்கள் துன்புறுகிறார்கள் வேலை நிறுத்தங்களில், 50 சதவிகிதம் அரசு நிறுவனங்களிலும் 30 சதவீதம் தனியார் நிறுவனங்களிலும், 10 சதவீதம் கூட்டு தொழிற் சங்களிலும் நடைபெற்றுள்ளன.

தொழிலாளர்களின் நியாயமான போராட்டங்களால தங்களுடைய கொள்ளை லாபத்துக்கு ஆபத்து ஏற்படும் என்று கருதும் தொழிலதிபர்கள் வேலை நிறுத்த போராட்ட உரிமையை அழித்துவிட வேண்டுமென்று கூக்குரலும் எழுப்புகின்றனர். இஸ்ரேல் நாட்டின் பெரு முத

(4ஆம் பக்கம் பார்க்க)

## கையாளுக்கு கவர்னர் பதவி!

கொல்லம், பிப். 10— கேரள முன்னாள் முதலமைச்சர் ஆர். சங்கர் கவர்னராக நியமிக்கப்படுவார் என்று நம்பகமான செய்தி வெளியாகியுள்ளது.

மாநிலங்களில் வேண்டாத அமைச்சரவைகளைக் கவிழ்ப்பதற்காக கவர்னர் பதவி மத்திய அரசால் பயன்படுத்தப்படுகிறது என்ற குற்றசாட்டு வலுப்பெற்றிருக்கும் போது காங்கிரஸ் கட்சியில் தீவிரமான ஈடுபாடுடைய திரு. சங்கர் கவர்னராக நியமிக்கப்படுகிறார்.

கேரள மக்களால் வெறுத்தொதுக்கப்பட்டிருக்கும் நபரைக் கவர்னராக நியமித்திருப்பதின் மூலம் கட்சி நலனுக்காக எல்லா ஜனநாயக நெறிகளையும் தூக்கியெறிய இந்திரா அரசு தயாராக உள்ளது என்பது நிரூபணமாகியுள்ளது.

## இந்து பத்திரிகையின் வருத்தம்

சென்னை ஆங்கில நாளேடான இந்து பத்திரிகை தன்னை கட்சி சார்பற்ற ஏடு எனக் காட்டிக்கொள்வதுண்டு ஆனால் கம்யூனிஸ்ட் கட்சியின் கை ஓங்குகிறபோது அதனுடைய நடுநிலைமை— கட்சி சார்பற்ற நிலை— எல்லாம் மாறி, பண மூட்டைக் கட்சிகளுக்காகப் பரிந்து பேசவும், கம்யூனிஸ்ட்கட்சிக்கு எதிராக வரிந்து கட்டவும் தொடங்கி விடும்.

கம்யூனிஸ்ட் கட்சிக்கு மேற்கு வங்க மக்களிடையே அமோக ஆதரவு பெருகியிருப்பதையும் 3 காங்கிரஸ் கட்சிகளும் பிளவுபட்டுக் கிடப்பதையும் கண்டு, வருந்தி தலையங்கம் தீட்டியுள்ளது.

"இந்தத் தேர்தலில் ஆளுங் காங்கிரசும், பழைய காங்கிரசும், பங்களா காங்கிரசும் மற்றும் உள்ள கம்யூனிஸ்ட் அல்லாத கட்சிகளும் ஒன்றுபட்டு கூட்டாளிகளாக நிற்பதற்குப் பதிலாக— துரதிர்ஷ்டவசமாக ஒன்றையொன்று எதிர்க்கும் எதிரிகளாக இருக்கிறார்கள், இதன் விளைவாக, கம்யூனிஸ்ட் முன்னணிக்கே வாய்ப்பாக அமையும். இது வருந்தத்தக்க நிலைமை'' என்று 9—2—71 இதழில் தலையங்கம் தீட்டியுள்ளது.

# சட்ட மன்றத்தில் மார்க்சிஸ்ட் கட்சியின் குரல்!

நாகப்பட்டினம் சட்டமன்றத் தொகுதி வேட்பாளர்

## கே. ஆர். ஞானசம்பந்தம்

### ஆசிரியர்களுக்கு ஊதியம் உயர்த்துக

"ஊதியம், உத்யோக உயர்வுபற்றி கோத்தாரி கமிஷன்செய்த பரிந்துரைகளை அமுலாக்க வேண்டும். பேராசிரியர்களுடைய ஊதியம் சமமாக இருக்கவேண்டும். அதேபோல, மாவட்டங்களிலுள்ள ஆசிரியர்களுடைய ஊதியம் அரசுத்துறையின் பல்வேறு தட்டுகளிலே உள்ள ஊழியர்களுடைய ஊதியத்திற்குச் சமமாக வேண்டும். தொடக்கப்பள்ளி ஆசிரியர்கள் பணியாற்றும் பலர் செகண்டரிகிரேடு படித்தவர்களாக இருந்தாலும் அவர்கள் ஹையர்கிரேடு ஆசிரியர்களுக்கான சம்பளத்திலேயே பணியாற்றுகின்றார்கள் அவர்களுக்கு உரிய ஊதியத்தைக் கொடுக்க அரசு உடனடியாக நடவடிக்கை எடுக்க வேண்டும்.

—(12—4—70 அன்று கல்விமானியக் கோரிக்கையின் மீது பேசியது)

### மீனவர்களுக்கு உதவி புரிக:

"நைலான் நூலுக்கு மானியம் கொடுக்கப்பட்டு வந்தது. அவசர கால நிலைமை பிரகடனப் படுத்தப்பட்டிருந்தகால் மானியம் கைவிடப் பட்டது. இன்று அவசர கால நிலைமை நீங்கிவிட்டதால் நைலானுக்கு மான்யம் வழங்கும் திட்டத்தைக் கொண்டுவந்து மீனவர்களுக்கு உதவவேண்டும், அடுத்தபடியாக மீனவர்களுக்கு வீடு கட்டும் திட்டம். இந்தத்திட்டமும் தேசிய நெருக்கடியின் காரணமாக ஒத்திவைக்கப்பட்டது. நாகைத் தொகுதியில் 15 ஆயிரம் மக்களுக்கு வீட்டுவசதியோ ரோட்டு வசதியோ, போக்குவரத்து வசதியோ, படிப்பு வசதியோ இல்லை! இதற்கு விசேஷமாகத் திட்டம் தீட்டி வழிவகை செய்யவேண்டும்.

(1968 மார்ச் மாத சட்டமன்றக்கூட்டத் தொடரில் பேசியது)

### வெண்மணிப்படுகொலையைத்தடுக்காததுஏன்?

"வெண்மணி விஷயத்தை கொஞ்ச நாட்களுக்கு முன்பே கவனித்திருந்து தக்க நடவடிக்கைகளை எடுத்திருந்தால் வெண்மணிப் படுகொலையை தடுத்து நிறுத்தியிருக்கமுடியும்.

டிசம்பர்—14ம் தேதி சிக்கல் பொதுக்கூட்டத்தில்— "வெண்மணியைக் கொளுத்தத் திட்டமிட்டிருக்கிறார்கள்'' அதைத் தடுப்பது அதிகாரிகளின் பொறுப்பு'' என்று நான் பேசினேன். அக்கூட்டத்தில் போலீஸ் அதிகாரிகளும் இருந்தார்கள். நான் பேசியதற்கு 10 நாட்கள் கழித்து வெண்மணி எரிக்கப்பட்டது. அதைத்தடுக்க எடுக்கப்பட்ட நடவடிக்கை என்ன? போலீஸ் அதிகாரிகளின் பக்கபலத்துடன் நடந்ததுதான் வெண்மணிப்படுகொலை!

### நகரசபைக்கு சலுகை தருக!

நாகை நகரசபையின் பொருளாதார நிலை மோசமாக இருப்பதுபோல் வேறெங்கும் இல்லை அது அரசுக்கு ரூ. 16 லட்சம் திருப்பித் தர வேண்டிய நிலையில இருக்கிறது. அதற்கு ஐந்து ஆண்டுகளுக்கு தவணை தரவேண்டும். அது மட்டுமல்ல நகரத்தில் ரூ. 300க்கும் குறைவாக வருமானம் உள்ளவர்களுக்கு தொழில்வரி விதிக்கக் கூடாது. நகரசபைத்தொழிலாளர்கள் நிலைமையை ஆராய ஒரு குழு அமைத்து நம பொருளாதார நிலைமைக்குத் தக்கவாறு நடவடிக்கை எடுக்க வேண்டும்.

(மார்ச் 1969 மார்ச் 13 அன்று பேசியது)

### அபிவிருத்தி மன்றங்களுக்கு அதிக அதிகாரம்:

மாவட்ட அபிவிருத்தி மன்றங்கள், பணம் வழங்குதற்கு அதிகாரம் உள்ள மன்றங்களாக இருந்தால்தான, அங்கத்தினர்கள் விரும்புகின்ற திட்டங்கள் நலலமுறையில் நிறைவேற உதவியாக இருக்கும்.

"ஜனநாயக சகாப்தத்தில் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகளைக்கொண்டு செயல்படும் நிலைமைதான் இருக்கவேண்டும்.

(1968 மார்ச் மாத சட்டமன்ற தொடரில் பேசியது)

### சமுதாய அபிவிருத்தி— பழையமுறை மாற வேண்டும்

சமுதாய அபிவிருத்தி பற்றி முக்கியமாக கூறப்பட்டிருக்கிறது. இன்றுள்ள அபிவிருத்தி பட்டாதாரர்களைச் சார்ந்ததாக இருக்கிறது. அதிலே கொள்கையளவில் மாற்றம் செய்யவேண்டும். எவ்வளவு பட்டாதாரர்கள் இருக்கிறார்களோ அவ்வளவு நன்கொடை வருகிறது. அதற்கேற்ப வசதிகள் செய்து கொடுக்கப்படுகிறது இந்த நிலைமையை மாற்றி, நன்கொடை கொடுக்க முடியாத கிராமங்களுக்கு அபிவிருத்தி செய்துகொடுக்கும் முறையில் கொள்கையளவில் மாறுதல் செய்து கொடுக்கவேண்டும்.

(1968 மார்ச்மாத சட்டமன்ற தொடரில் பேசியது)

### அரசு — மாறிவிட்டது இலாக்காகளின் செயல் முறை மாறவில்லை

அரசு மாறி இருக்கிறது. அமைச்சர்கள் மாறிவிட்டார்கள். ஆனல் அந்த இலாகாவில் மாறுதல் இல்லை. ஒரு சின்ன விஷயம், "பழனிச்சாமி என்ற ஒரு குழு, படகுக்காக மனு தந்தும் எம். எல். ஏ யைப் பார்த்தும், டைரக்டரைப் பார்த்தும், விஷயம் நடக்கவில்லை. உதாரணத்திற்காக இதைச் சொல்கிறேன்.

### கால்நடை இலாக ஊழியர்கள்

கால்நடை இலாக ஊழியர்களில் "கண்டிஜன்சி மீனியல்ஸ்'' என்றிருக்கிறார்கள். அவர்கள் கடுமையான வேலைகள் செய்யக்கூடிய நிலையில் இருக்கிறார்கள். அவர்களை நிரந்தர ஊழியர்களாக ஆக்கி, சர்க்கார் கொடுக்கும் சலுகைகள் பிராவிடன்ட் பண்ட் போன்ற வசதிகளை அவர்கள் பெறுவதற்கு வழி செய்தால் பல ஆயிரக்கணக்கான ஊழியர்களுக்கு உற்சாகம் ஏற்படும்.

(1968 மார்ச் சட்டமன்ற கூட்டத் தொடரில் பேசியது)

## தஞ்சை தேர்தல் இயக்கச் செய்திகள்

# தஞ்சை தொகுதிகளில் உற்சாகமான வேலைகள்!

திருவாரூர், பிப். 9— தஞ்சை மாவட்டம் திருத்துறைப்பூண்டி வேதாரண்யம் தொகுதிகளில் தேர்தல் நிதி ரூ. 17 ஆயிரம் வசூலிப்பதென்று 26—1—71 ந் தேதி கூடிய ஊழியர்கள் கூட்டத்தில் முடிவு செய்யப்பட்டது. 1600க்கு மேற்பட்ட ஊழியர்கள் கலந்துகொண்ட பேரவைக் கூட்டமொன்று கச்சனத்தில் நடைபெற்றது. தோழர் ஏ. சுப்பையா தலைமைவகித்தார்.

திருத்துறைப்பூண்டி தாலுகா கட்சி செயலாளர் தோழர் என். மணியன், தோழர்கள் ஆர். கோவிந்தசாமி, வி. சம்பந்தம், வேதாரண்யம் தொகுதி வேட்பாளர் கோ. ராமையன், நாகை நாடாளுமன்ற வேட்பாளர் தோழர் பாரதிமோகன் ஆகியோர் பேசினர்கள். தேர்தல் நிதியாக ரூ. 17 ஆயிரத்தை பிப்ரவரி 10 ந் தேதிக்குள் வசூலிப்பதென்று ஏகமனதாக முடிவெடுத்து, தோழர்கள்தேர்தல் களத்தில் உற்சாகமாக இறங்கியுள்ளார்கள்.

### குடவாசல்தொகுதியில் தேர்தல் பிரச்சாரம்

தஞ்சை மாவட்டம் குடவாசல் தொகுதியில் போட்டியிடும் தோழர் கோ. வீரய்யனை ஆதரித்து கொரடாச்சேரி, கண்கொடுத்த வனிதம், குழிக்கரை, கமலாபுரம், கொட்டவாசல், பொதுக்குடி, அரசவனங்காடு, திருக்கண்ணமங்கை, காட்டூர் மருவஞ்சேரி, திருவீழிமழலை, இரவாஞ்சேரி, கணடரமாணிக்கம், சிறுகளத்தூர் ஆகிய இடங்களில் தேர்தல் காரியாலயங்கள் திறக்கப்பட்டுள்ளன. இந்தத் திறப்பு விழாக்களில் பெருமளவில் பொதுமக்கள் கலந்துகொண்டார்கள். தோழர் கோ. வீரய்யன் கிராமம் கிராமமாகச் சென்று வாக்காளர்களைச் சந்தித்து வருகிறார் சென்றவிடமெல்லாம் நல்ல வரவேற்பு இருக்கிறது.

### குடவாச தேர்தல் நிதி!

குடவாசல் தொகுதியில் ரூ 20 ஆயிரம் தேர்தல் நிதி வசூல் உற்சாகமாக நடைபெற்று வருகிறது. குடவாசலுக்கு தோழர் பி. ராமமூர்த்தி பிப்ரவரி 5-ந் தேதி வந்த பொழுது முதல்கட்ட நிதயளிப்பாக ரூ. 2750 அவரிடம் அளிக்கப்பட்டது. குடவாசல் குளத்தருகே நடைபெற்ற பெரும் பொதுக்கூட்டத்தில் தோழர் பி. ஆர். இன்றைய அரசியல் நிலைமைகளை விளக்கிப் பேசினார்.

### தஞ்சையில் ராமமூர்த்தி சுற்றுப்பயணம்

தஞ்சை மாவட்டத்தில் போட்டியிடும் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி வேட்பாளர்களை ஆதரித்து தோழர் பி ராமமூர்த்தி பிப்ரவரி 5, 8 தேதிகளில் பல பொதுக்கூட்டங்களில் பேசினார். பிப்ரவரி 5 ந் தேதி மாலை 6 மணிக்கு மன்னார்குடியில் நடைபெற்ற பெரும் பொதுக்கூட்டத்தில் தோழர்கள் வெங்கடேசசோழகரையும், பாரதிமோகனையும் ஆதரித்துப் பேசினார். இக்கூட்டத்தில் 8 ஆயிரத்திற்கு அதிகமான மக்கள் கலந்துகொண்டனர்.

இரவு 9 மணிக்கு குடவாசல் நகரத்தில் நடைபெற்ற பொதுக்கூட்டத்தில் தோழர் கோ. வீரய்யனையும், பி. எஸ். தனுஷ்கோடியையும் ஆதரித்து தோழர் பி. ஆர். பேசினார்.

பிப்ரவரி 6 ந்தேதி மாலை திருவாரூர் நகரத்தில் நடைபெற்ற பொதுக்கூட்டத்தில், தோழர்கள் வி. தம்புசாமியையும், தோழர் பாரதிமோகனையும் ஆதரித்து தோழர் ராமமூர்த்தி பேசினார் பலாயிரக் கணக்கான மக்கள் திரண்டிருந்த இக்கூட்டத்தில் முதற்கட்ட தேர்தல நிதியாக ரூ. 2000, பி. ஆரிடம் அளிக்கப்பட்டது.

இரவு 9 மணிக்கு நாகப்பட்டினம் அவுரித் திடலில் நடைபெற்ற மாபெரும் பொதுக் கூட்டத்தில் தோழர்கள கே. ஆர். ஞானசம்பந்தத்தையும், பாரதிமோகனையும் ஆதரித்து தோழர் ராமமூர்த்தி பேசினார். 15 ஆயிரத்திற்கும் மேற்பட்ட மக்கள் கலந்துகொண்ட கூட்டத்தில் இன்றைய அரசியல் நிலைமைகளையும், நமது நிலையையும் விளக்கி தோழர் ராமமூர்த்தி பேசினார். (விபரம் பின்னர்)

மீண்டும் இம்மாதக் கடைசியில் தஞ்சை மாவட்டத்தில் பல பொதுக்கூட்டங்களில் கலந்துகொள்கிறார்.

### 3 முட்டை 3-25 ரூபாய்!

வேதாரண்யம் தொகுதியை சேர்ந்த தோழர்கள் கிராமம் கிராமமாக உண்டியல் வசூல் செய்துகொண்டு வருகையில் அய்யூர் கிராமத்தைச் சேர்ந்த தோழர் மாரிமுத்துவின் மனைவியார், காசு இல்லாத காரணத்தால் தன் வீட்டிலிருந்த 3 கோழி முட்டைகளை நன்கொடையாக அளித்தார். இந்த 3 முட்டைகளையும் ஏலத்திற்கு விட்டதில் ரூபாய் 3-25 கிடைத்தது.



# கண்ணோட்டம்

## ஒன்றல்ல..... ஓராயிரம் நாக்கு!

புதுக்கோட்டையில் 25—6—70 அன்று கூடிய மார்க்சிஸ்ட் கட்சியின் மாநிலக்குழுக்கூட்டம்— தி. மு. கழகம் தனது மக்கள் விரோதப் போக்கை மாற்றிக்கொள்ளாவிட்டால் 'இந்நிலையைப் பயன்படுத்தி சிண்டிகேட் காங்கிரஸ் ஆதாயம் எடுப்பதற்கான ஆபத்து தமிழ் நாட்டில் வளர்ந்து வருகிறது'' — என்று எச்சரிக்கை செய்தது.

— அதுபற்றி வலதுகம்யூனிஸ்டு திரு கல்யாண சுந்தரம் கூறியதென்ன?

''தி. மு கழகத்தின் பலஹீனத்தையும், தவறுகளையும் எப்படி காமராஜர் பயன்படுத்திக் கொள்வார் என்பதை என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை. அதனை இடதுசாரிக் கட்சிகள் ஏன் பயன்படுத்திக் கொள்ள முடியாது என்பதும் எனக்குப் புரியவில்லை. தி. மு கழகத்திற்கு மாற்றுக் கட்சியாக சிண்டிகேட்டையும் காமராஜரையும் காட்டும் பணியை ஏன் ராமமூர்த்தியே செய்கிறார்?''

(6—7—70 இந்தியன் எக்ஸ்பிரஸ்)

—என்று கல்யாணசுந்தரம் கடிந்துகொண்டார்.

கல்யாணசுந்தரம் கூறியுள்ள கருத்தின் உள்ளடக்கம் இதுதான்:—

1) தமிழகத்தில்— திமுகவிற்கு சிண்டிகேட்டும், சிண்டிகேட்டிற்கு திமுகவுமே மாற்றுக்கட்சிகள் என்பது சரியல்ல; இவை இரண்டிற்கும் மாற்றாக இடதுசாரிக் கட்சிகள் விளங்க முடியும்.

2. அந்த இடதுசாரிக்கட்சிகள்-தி. மு. க. வின் பலஹீனத்தையும், தவறுகளையும் பயன்படுத்திக் கொள்ள முடியும்.

3) இவ்விதம் இடதுசாரிக் கட்சிகள் தி. மு. க. விற்கு மாற்றாகத் தோன்றுவதனால்-சிண்டிகேட் பலமடையாது!

ஆனால்—

இதைச் சொன்ன ஆறுமாதத்திற்குள்—

அடித்தாரே பார்க்கலாம் அந்தர் பல்டி!

'சிண்டிகேட் அணி, தி. மு.க. அணி தவிர மூன்றாவது அணிக்கே இடமில்லை. மூன்றாவது அணியாக மார்க்சிஸ்ட் கட்சி போட்டியிடுவது சிண்டிகேட்டிற்குத்தான் பயனளிக்கும்'' —என்று பிளேட்டை மாற்றிப் போட்டார்.

கதை இதோடு நின்றுவிடவில்லை!

''தி. மு. க. வையும் அதன் கொள்கைகளையும் பற்றி ஒரு முடிவிற்கு வருவதற்கு மார்க்சிஸ்ட் கட்சிக்கு மூன்று வருடம் பிடித்திருக்கிறது என்பது எனக்கு ஆச்சரியத்தை அளிக்கிறது. அதிலும் இத்தீர்மானத்தின்படி எவ்வளவு காலம் உறுதியாக நிற்பார்கள் என்று எனக்குப் புரியவில்லை''

(ஜூலை மாதம், 1970 எக்ஸ்பிரஸ்)

—என்றும் கல்யாணசுந்தரம் கூறினார்!

அதாவது தி. மு கழகம் மக்கள் விரோதப்போக்குகளைக் கடைபிடிக்கும் கட்சி—என்ற உண்மை புரிய மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்டகட்சிக்கு மூன்று வருடம் பிடித்ததாம்! அது கல்யாணசுந்தரத்திற்கு மூன்று வருடத்திற்கு முன்பே நிதர்சனமாக' தெரிந்துவிட்டதாம்!

(சும்மாசொல்லக்கூடாது' சவரக்'கத்தியின் முனையைப்போல அவ்வளவு கூர்மையான மூளை அவருக்கு!!! இல்லாவிட்டால்—தி. மு. க. வின் சுய சொரூபத்தை 3 ஆண்டுகளுக்கு முன்பே கண்டுபிடித்திருக்க முடியுமா'')

ஆனால் அவ்வளவு 'கருக்காக' கழகத்தைக் கணித்த கல்யாணசுந்தரனார்—இப்போது என்ன செய்கிறார்?

கழகத்திற்கு 'முற்போக்கு' சிங்காரம் செய்வதில் சிரத்தையுடன் ஈடுபட்டிருக்கிறார்!

தனது கொள்கையை கழகத்தின் காலடியில் 'அடமானம்' வைத்து விட்டு ஒரு சில 'சீட்டுகளைப்' பெற்றிருக்கிறார்!

தனது 'மேதாவிலாசக்'கணிப்பையெல்லாம் உடைப்பில் போட்டு விட்டார்!

இவ்விதம் தனது மூன்று வருடத்திற்கு முந்தைய நிலையிலிருந்து தடம் புரண்டு குட்புறக்கவிழ்ந்துவிட்ட கல்யாணசுந்தரனார்.

தீர்மானத்தின்படி மார்க்சிஸ்ட்கட்சி நிற்குமா? என்பது எனக்குத்தெரியாது''—என்று சந்தேகப்படுவது எவ்வளவு முரண்பாடான செயல்!

பனிச்சறுக்கைவிட வேகமாக சறுக்கி—சந்தர்ப்பவாத பாதாளத்தில் வீழ்ந்துவிட்ட கல்யாணசுந்தரனார்—மார்க்சிஸ்ட் கட்சியின் கொள்கைபிடிப்பினைச் பேசாமல் சும்மா இருப்பதே நலம்!

## மார்க்சிஸ்ட் கட்சி ஆதரிக்கும் சுயேட்சை வேட்பாளர் பட்டியல்!

கேரளத்தில் கீழ்வரும் சுயேட்சை வேட்பாளர்களுக்கு மார்க்சிஸ்ட் கட்சி வரும், தேர்தலில் ஆதரவளிக்கிறது.

வடகரை தொகுதியில் தட்சிணாமூர்த்திக்கும் கோழிக்கோடில் அபூபக்கருக்கும் பதில் புது வேட்பாளர்களின் பெயர்கள் அறிவிக்கப்பட்டுள்ளன.

வடகரை:— ஏ. வி. ராகவன்

கோழிக்கோடு:— பாலாட்டு குஞ்சுகோயா

மஞ்சேரி:— ஈ. பி. முகமது அலி

மூவாற்றுபுழை:— ஜார்ஜ் ஜோசப்

# உங்கள் வாக்கு அரிவாள் சுத்தியல் நட்சத்திரத்திற்கே!

தோழர் வி. கார்மேகம்
இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்)
தமிழ் மாநிலக்குழு உறுப்பினர்
மதுரை மத்திய தொகுதி வேட்பாளர்

தோழர் எம். பூபதி
இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்)
தமிழ் மாநிலக்குழு உறுப்பினர்
கோவை கிழக்குத்தொகுதி வேட்பாளர்

தோழர் கே. எம். ஹரிபட்
இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்)
சென்னை மாவட்ட செயற்குழு உறுப்பினர்.
சென்னை பேசின் பிரிட்ஜ் தொகுதி வேட்பாளர்.

## மார்க்சிஸ்ட் கட்சி போட்டியிடும் தொகுதிகளில் வேட்பாளர் விபரம்

தமிழ்நாடு சட்டமன்றத்துக்கு மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி போட்டியிடும் 37 தொகுதிகளில் மார்க்சிஸ்ட் வேட்பாளர்களின் பெயர்களும் அவர்களுக்கு எதிராக நிற்கும் மற்ற கட்சிகளின் வேட்பாளர்களின் பெயர்களும் வருமாறு;

**சென்னை நகரம்**

பேசின் பிரிட்ஜ்: கே. எம். அர்பட் — மார்க்ஸிஸ்ட்
எம். ஆர். மன்னன் — தி. மு. க.
கே. ராமதாஸ் — சிண்டிகேட்
கே. வி மணவாள நாயக்கர்—சுயேச்சை

**செங்கற்பட்டு மாவட்டம்**

திருவெற்றியூர்; சி. கே. மாதவன் ... மார்க்சிஸ்ட்
எம். வி நாராயணசாமி — தி. மு. க.
வெங்கடேசலு நாயுடு — சிண்டிகேட்
சூரியமுத்து — சுயேச்சை

காஞ்சிபுரம்: கே. எஸ் பார்த்தசாரதி—மார்க்சிஸ்ட்
சி வி எம். அண்ணாமலை தி. மு. க.
எஸ். வி. நடேசமுதலியார் — சிண்டி

**வட ஆற்காடு மாவட்டம்**

காட்பாடி: கே. ஆர். சுந்தரம் — மார்க்சிஸ்ட்
துரைமுருகன் — தி. மு. க,
தண்டாயுதபாணி — சிண்டிகேட்

குடியாத்தம்; வி. கே. கோதண்டராமன் — மார்க்சிஸ்ட்
ஏ. துரைசாமி — தி மு க
டி. ஏ. ஆதிமூலம் — சிண்டி
ஆர். கிருஷ்ணன் — சுயேச்சை

**தென் ஆற்காடு மாவட்டம்**

நெல்லிக்குப்பம்: சி. கோவிந்தராஜன் — மார்க்சிஸ்ட்
வி கிருஷ்ணமூர்த்தி கவுண்டர் — தி மு க
கே ஜி சந்தன் — சிண்டி
பி குணசேகரன் — சுயே
ஆர் எச ராஜன் — சுயே

பண்ருட்டி: எஸ் நடராஜன் — மார்க்சிஸ்ட்
எஸ் ராமச்சந்திரன் — தி முக
எஸ் வி வடிவேலு படையாச்சி — சிண்டி

**சேலம் மாவட்டம்**

வீரபாண்டி: கே ரங்கண்ணன் — மார்க்சிஸ்ட்
எஸ் ஆறுமுகம் — தி மு க
டி வி திருமலை — சிண்டி
எம் மலைகொழுந்து பிள்ளை — சுயே

**நீலகிரி மாவட்டம்**

கூடலூர் (ரிசர்வ்): கே ராஜன் — மார்க்சிஸ்ட்
கே புட்டா — வலது கம்யூனிஸ்ட்
கே எச் பொம்மன — சுதந்

**கோவை மாவட்டம்**

சிங்காநல்லூர்; வெங்கிடு — மார்க்சிஸ்ட்
ஏ சுப்பிரமணியம் — பி எஸ் பி
பி எஸ் சுப்பையா — சிண்டி
என் மாரப்பன் — சுயே

பேரூர்: கே. காரமடை — மார்க்சிஸ்ட்.
என். மருதாசலம் — வலது கம்யூனிஸ்ட்
கே. பி. பழனிசாமி — சிண்டி

கோவை கிழக்கு: எம் பூபதி — மார்க்சிஸ்ட்
கே, ரங்கநாதன் — தி. மு க.
ஏ. தேவராஜ் —சிண்டி

சத்தியமங்கலம்: எஸ். எம். பத்ரன் — மார்க்சிஸ்ட்
எஸ். கே சுப்ரமணியம் — தி மு. க.
பி ஜி: கருத்திருமன் — சிண்டி

பல்லடம்: ரங்கராமமூர்த்தி — மார்க்சிஸ்ட்
கே என். குமாரசாமி — பி. எஸ். பி.
ஆர், சேங்காலியப்பன் — சிண்டி

**மதுரை மாவட்டம்.**

பழனி (ரிசர்வ்): என். பழனிவேல் — மார்க்சிஸ்ட்
சி. பழனிசாமி — தி மு. க.
சுப்ரமணியம் — சிண்டி

கம்பம்:— பி. ஹூசேன்மீர் — மார்க்சிஸ்ட்
பி. எஸ் செல்லதுரை — தி மு க
கே பி கோபால் — சிண்டி

திருப்பரங்குன்றம்: கே பி ஜானகியம்மாள்—மார்க்சிஸ்ட்
காவேரிமணியம் — தி மு க
ஐ பாண்டித்தேவர் — சிண்டி
பி தியாகராஜன் — சுயேட்சை

மதுரை மேற்கு: என் சங்கரய்யா — மார்க்சிஸ்ட்
கே டி கே தங்கமணி—வலது கம்யூனிஸ்ட்
பி ஆனந்தம் — சிண்டி

மதுரை மத்திய தொகுதி: வி கார்மேகம்—மார்க்சிஸ்ட்
கே திருப்பதி — தி மு க
பி நெடுமாறன் — சிண்டி
கிருஷ்ணய்யர் — சுயேட்சை

மதுரை கிழக்கு: வி வீரபத்திரன் — மார்க்சிஸ்ட்
கே எஸ் ராமகிருஷ்ணன் — தி மு க
எல் கே டி முத்துராமு — சிண்டி
எஸ் கே பாலகிருஷ்ணன் — ஜனசங்கம்

திண்டுக்கல்: ஏ பாலசுப்ரமணியம் — மார்க்சிஸ்ட்
ஜமால் ஹுசேன் — சுயேட்சை
ஓ எஸ் சுந்தரம்பிள்ளை — சிண்டி
சி கஸ்தூரிநாதன் — சுயேட்சை

வேடசெந்தூர்: என் வரதராஜன் — மார்க்சிஸ்ட்
பி முத்துசாமி — தி மு க
எஸ் நஞ்சுண்டராவ் — சிண்டி

**திருச்சி மாவட்டம்**

திருமயம்: ஆர் உமாநாத் — மார்க்சிஸ்ட்
ஏ தியாகராஜன் — தி மு க
பி ஆர் ராமநாதன் — சிண்டி
பி சக்திவேல் — சுயேட்சை
சின்னையா மதார்சா — சுயேட்சை
வி சோமசுந்தரம் — சுயேட்சை

**தஞ்சை மாவட்டம்**

திருவையாறு: வெங்கடாசலம் — மார்க்சிஸ்ட்
ஜி இளங்கோவன் — தி மு க
கே பி பழனி — சிண்டி
கே பவுன்ராஜ் — சுயேட்சை
நாசராஜன் — சுயேட்சை

செம்பனார்கோவில்: வி கே முத்துசாமி — மார்க்சிஸ்ட்
டி வி சம்பத் — தி மு க
கே ஆர் சம்பந்தம் — சிண்டி

குத்தாலம்: நடராஜன்— மார்க்சிஸ்ட்
என கணேசன் — தி மு க
கே கே தீன் — சிண்டிகேட்
எம் சோமசுந்தரம் — சுயேட்சை

கொடவாசல்: ஜி வீரையன் — மார்க்சிஸ்ட்
கே பெரியசாமி உடையார் — தி மு க
தட்சிணாமூர்த்தி காலிங்கராயர் — சிண்டி
கே எஸ் உருத்திராபதிநாடார்—சுயேட்சை

நன்னிலம் (ரிசர்வ்): கே எஸ் பக்கிரிசாமி — மார்க்சிஸ்ட்
தேவேந்திரன் — தி மு க
வி எஸ் அருணாசலம் — சிண்டி

நாகைபட்டினம்: கே ஆர் ஞானசம்பந்தம்— மார்க்சிஸ்ட்
ஏ ராஜமாணிக்கம் — தி மு க
எல் எஸ் ராமநாதத்தேவர் — சிண்டி

வேதாரண்யம்: ஜி ராசமயன் — மார்க்சிஸ்ட்
எம் மீனாட்சிசுந்தரம் — தி மு க
பி சி வேலாயுதபொாரையார் — சிண்டி

மன்னார்குடி: வெங்கடேசசோழர் — மார்க்சிஸ்ட்
கே பாலகிருஷ்ணன் — தி மு க
டி எல் சுவாமிநாத உடையார் — சிண்டி
ஜி ஸ்தனிஸ்லாஸ் — சுயேட்சை

திருவாரூர்: யூ தம்புசாமி — மார்க்சிஸ்ட்
எம் கருணாநிதி — தி மு க
வி வேதையன் — சிண்டி

**திருநெல்வேலி**

அம்பாசமுத்திரம்: ஏ நல்லசிவன் — மார்க்சிஸ்ட்
ஆர் வி அனந்தகிருஷ்ணன் — தி மு க
எஸ சங்கமுத்து தேவர் — சிண்டி

**குமரி மாவட்டம்**

நாகர்கோவில்: கோபிநாத் — மார்க்சிஸ்ட்
ஜி கிறிஸ்டோபர் — தி மு க
எம் மோசஸ் — சுதந்திரா

பத்மநாபபுரம்: எம் எம் அலி — மார்க்சிஸ்ட்
ஜி பி மைக்கேல் — தி மு க
ஏ சுவாமிதாஸ் நாடார் — சிண்டி

திருவெட்டார்: ஜே ஹேமச்சந்திரன் — மார்க்சிஸ்ட்
என் ஞானசிகாமணி — தி மு க
ஜே ஜேம்ஸ் — சிண்டி

விளவங்கோடு: டி பாக்கியதாஸ் — மார்க்சிஸ்ட்
ஞானதாஸ கிறிஸ்டோபர் — தி மு க
ஆர் பொன்னப்பநாடார் — சிண்டி
பி ஆல்வின் — சுயேட்சை

# இரண்டு கேடும் ஒரே கேடு தான்!

## வேடசந்தூர் தொகுதியில் கொள்கை முழக்கம்!

''சுதந்திரத்தையும், ஜனநாயகத்தையும் காப்பாற்ற 'அவதாரம்'' எடுத்தவன் நான் என்கிறது சிண்டிகேட். ஜனநாயக சோஷலிசத்தைக் கொண்டு வந்தே தீருவேன் என்று போலிவேடம் போடுகிறது இண்டிகேட். சிண்டிகேட்டைச் சுற்றி சில கட்சிகள்; இண்டிகேட்டைச் சுற்றி சில கட்சிகள். 'பிற்போக்கு அணியை முற்போக்கு அணி எதிர்க்கிறது'' என்ற போலிச் சித்திரம் தீட்டி வோட்டுக்களைப் பறித்துச் செல்ல சூழ்ச்சி நடக்கிறது. உஷார்! வாக்காளர்களே, உஷார்!'' என்று தோழர் என். வரதராஜனை ஆதரித்து வெளியிட்ட நோட்டீஸ் எச்சரிக்கிறது.

அந்நிய நாட்டு முதலாளிகளை அழைத்து, சலுகைகள் பல தந்து நாட்டை ஒட்டச் சுரண்டவிடுவதில்—

அந்நிய நாட்டுக் கடன்களையே நம்பி நாட்டைஅந்நியருக்கு அடகு வைப்பதில்—

பெரு முதலாளிகளுக்கு சலுகைக்குமேல் சலுகை தந்து கொழுக்க வைத்து மக்களை சாகடிக்க விடுவதில்,— நோட்டுப் புழக்கத்தை அதிகரித்து பணவீக்கத்தை ஏற்படுத்தி விலைவாசிகளை ஏற்றிக் கொண்டே இருப்பதில்—

மக்கள்மீது மறைமுக வரிகளை சுமத்திக் கொண்டே போவதில்—

முதலாளித்துவ வளர்ச்சிக்காக திட்டமிட்டு நாட்டில் வறுமையையும், வேலையின்மையையும் வளர்த்துக் கொண்டே செல்வதில்-இண்டிகேட்டும், சிண்டிகேட்டும ஒரே அடிப்படைக் கொள்கைகளைக் கொண்டவை இவைஒன்றுக்கு ஒன்று மாற்று அல்ல. ஒரே எதிரியின் இரண்டு வேடங்களே! தி. மு. க. வும், ''இடதுசாரி'' என கூறிக் கொள்ளும் சில கட்சிகளும இவ்வுண்மையை மறைத்து முதலாளிகளின் சாமர்த்திய அரசியலுக்குப் பின் நம் நாட்டு மக்களை தள்ளிவிடவே உதவுகின்றன.

உலகம் தழுவிய நோய் பிடித்த இவைறைய பொருளாதார சமூக அமைப்பை புரட்சிகரமாக, மாற்றாமல்; நாட்டின் எந்தப் பிரச்சனைக்கும் முடிவில்லை.

அப்படிப்பட்ட புரட்சிகர மாற்றத்திற்கு நின்று இறுதிவரை உறுதியாகப் போராடும் ஒரே கட்சி மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி'' இவ்வாறு கொள்கை விளக்கம் தரும் நோட்டீஸ்கள் ஆயிரக்கணக்கில் மக்களிடையே விநியோகிக்கப்படுகிறது. மக்களிடையே ஆதரவு பெருகுகிறது

## இஸ்ரேல்..........

(3-ம் பக்கத் தொடர்ச்சி)

லாளி மோஸிலெவி, வேலை நிறுத்தங்களால போர் முயற்சிக்கு குந்தகம் ஏற்படுவதாக அலறியுள்ளார்.

ஹாகல் என்ற வலதுசாரிக் கட்சியும் வேலை நிறுத்தத்தை எதிர்த்துள்ளது.

ஒரு வருட காலத்துக்கு வேலை நிறுத்தமே கூடாது என்றும் தொழில் தகராறை ஒருவர் தீர்ப்புக்கு விட்டுவிட வேண்டும் என்றும் அது கூறுகிறது 1970-ல் இஸ்ரேல தொழிலமைச்சர் வெளியிட்ட தொழிற் அறிக்கையில் ''தொழிலாளர்களின் வேலைநிறுத்தப் போராட்டங்கள் இல்லையெனில் நாட்டில் விலையுயர்வும் வரி உயர்வும் ஏற்படாது'' என்றார்.

இஸ்ரேல் தொழிற்சங்கம் (கிஸ்டார் அட் என்ற பெயருடையது) வேலை நிறுத்த போராட்ட உரிமையை தடைசெய்வதை எதிர்த்தாலும் தொழிலாளர் பக்கம் எப்பொழுதும் உறுதியாக இருப்பதில்லை. இச்சங்கம் 1 லட்சம் உறுப்பினர்களைக் (இது இஸ்ரேல் மக்கள் தொகையில் மூன்றில் ஒரு பகுதியாகும்)கொண்டது. தனனுடைய பொன் விழாவை இந்த டிசம்பர் மாதம்தான் அது கொண்டாடியது.

இந்தத் தொழிற் சங்கத்தின் தலைவர்கள், ஆளும் கட்சியின் கொள்கைகளை பின்பற்றுபவர்களாகவும், உறுப்பினர்களாகவும் இருப்பதால, தொழிலாளர்களின் வேலை நிறுத்த தோல்விகளைப்பற்றி கவலைப்படுவதில்லை.

1970-ம் ஆண்டின் ஆரம்பத்தில், தொழிற தகராறுகளுக்கு விலை ஏற்றம், சம்பள உயர்வு, வரி உயர்வு போன்றவைகளுக்கும் முடிவு கட்ட அரசு தொழிற்சங்கத்துடன் பேச்சு நடத்தியது. ஆனால் உருப்படியான பலன் எதுவும் கிடைக்கவில்லை. 1970 ல் ஆகஸ்ட்டில் இஸ்ரேல் அரசு நாட்டில் பொருள்களின் விலைகளை உயர்த்தியும். வரியை மிகக் கூட்டியும், போர்ப்படை செலவுக்கு நிதி திரட்டியது.

1970-71 வருடாந்திர பட்ஜெட்டிலுள்ளதில் 60 சதவீதத்தை போருக்காக செலவு செய்ய (இசுரேலின் நாடாளுமன்றம்) அனுமதி நல்கியுள்ளது. மேலும், அண்மையில் இசுரேல் மக்கள் மீது வரி விதித்துள்ளது

போர்ச் செலவால் ஏற்பட்ட நெருக்கடியையும் ஊழியர்கள் வாழ்க்கைத்தரம் உயரவும் மக்கள் மீது அதிக வரிகள் போட்டு சரிசெய்யப்படுகிறது.

லீ மாண்ட்டின் கட்டுரை மேலும் கூறுவதாவது: சமூக உணர்வுகளைக் கெடுபிடியுத்தம் மட்டும் தீர்த்துவிடாது. 1966-ல் நாட்டில ஏற்பட்ட பொருளாதார நெருக்கடி இன்று வேலையில்லாத் திண்டாட்டத்தையும் உண்டாக்கியுள்ளது.

1967-ல் ஏற்பட்ட பொருளாதார அபிவிருத்தி இராணுவப்போர்ச் செலவுகளை சரிகட்டவே பயன்பட்டிருக்கிறது

இசுரேலின் ஆளும் வர்க்கங்கள் அமைதிக்கும் போர்க்கும் எப்பொழுதும் அமெரிக்க ஏகாதிபத்தியத்தை நம்பி, அதனிடமிருந்து உதவியை பெற்றுக்கொண்டிருக்கிறது. ஆனால்,அமெரிக்க ஏகாதிபத்தியம் இசுரேல் மக்களை போரில் ஈடுபடுத்தி இசுரேலின் செல்வ மனைத்தையும் சுரண்டிக் கொண்டிருக்கிறது. இப்பொழுது அங்கு ஏற்பட்ட பொருளாதார நெருக்கடியாலும் வேலையில்லாத் திண்டாட்டத்தாலும் மக்கள் இடம் பெயர்ந்தாலும் யுத்தம் நிறுத்தம் செய்யவேண்டிய சூழ்நிலைமையை இஸ்ரேல் அரசுக்கு தோற்றுவித்துள்ளது.

## நடக்க இருப்பவை

மதுரை கிழக்கு தொகுதி தேர்தல் பிரசாரக் கூட்டம்.

38வது வார்டு ராமச்சந்திரபுரம் தேர்தல் காரியாலய திறப்புவிழா.

தேதி: 11—2—71-ம் தேதி மாலை 7 மணி.

இடம்: ராமச்சந்திரபுரம்சந்து.

பேசுபவர்கள்:
கே. வாசுதேவன்,
வி வீரபத்திரன்,
வி. பாலகிருஷ்ணன்,
எம் பி. ராமச்சந்திரன்,

பி ஆர். டேப் போடப்படும்.

ஃ ஃ ஃ

மதுரை கிழக்குத் தொகுதி தேர்தல் பொதுக்கூட்டம்

தேர்தல் அலுவலக திறப்பு விழா.

தேதி: 12—2—71.

இடம்: வடக்கு மாசி வீதி, தளவாய் அக்ரகாரம் அருகில்.

மாலை 6 மணிக்கு.

பி. ஆர். டேப் நிகழ்ச்சி நடைபெறும்

பேசுபவர்கள்:
வி. வீரபத்திரன்
கே. வாசுதேவன்,
எம். ராஜாங்கம்,
என். துளசிராம்,

பரமசிவம் குழுவினர் அரசியல் நிகழ்ச்சி பாடடுக் கச்சேரி நடைபெறும்.

ஃ ஃ ஃ

தேர்தல் பொதுக்கூட்டம் கிழக்குத் தொகுதி.
1. பாலரெங்கபுரம்
2 மீன் மார்க்கட்

பேசுபவர்கள்:
தோழர்கள் வி. வீரபத்திரன்,
,, கே. வாசுதேவன்,
,, என் சொக்கலிங்கம்

பரமசிவம் முன்னர் கச்சேரி, நடைபெறும்

ஃ ஃ ஃ

ஹோட்டல் தொழிலாளர் மகாசபை கூட்டம்.

நாள்: 11—2—71 இரவு8மணி

இடம்: மதுரை ஜெனரல் ஒர்க்கர்ஸ் யூனியன்.

பேசுவோர்:
தோழர் ஐ. மாயாண்டி பாரதி
'' ஆர். சாமிவேல்
,, கே. வாசுதேவன்.

## தி.க.விலிருந்து விலகி செங்கொடி சங்கத்தில் சேர்ந்தனர்!

கொடவாசல், பிப். 9—

கொடவாசல் சட்டமன்றத் தொகுதிக்குட்பட்ட நாகலூர் பொன்னூர் கிராமங்களில் திராவிடக் கழகத்திலிருந்து 10 உறுப்பினர்கள், அக்கட்சியின் தவறான, சந்தர்ப்பவாத கொள்கைகளைக் கண்டித்து வெளியேறி செங்கொடி சங்கத்தில் சேர்ந்துள்ளார்கள்.

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) தமிழ் மாநிலக் குழு சார்பில் தீக்கதிர் அச்சகத்தில் (13 முதல் சந்து, வடக்குச்சித்திரை வீதி, மதுரை-1) அச்சிட்டு வெளியிடுவர் ஆசிரியர்: கே. முத்தையா

# வேலையில்லாத் திண்டாட்டத்தை எதிர்த்துப் போராட உங்கள் வாக்கு அரிவாள் சுத்தியல் நட்சத்திரத்திற்கே!